# சைவ வாழ்வியற் சிந்தனைகள்



குமாரசாமி சோமசுந்தரம்

உ

ஓம்

சிவமயம்





# சைவ வாழ்வியற் சிந்தனைகள்

திரு. அநு. வை. நாகராஜன்
அவர்கட்கு
அன்புடன்
08.10.2000

குமாரசாமி சோமசுந்தரம்

ரஜி வெளியீடு
கொழும்பு
1999

# நூற் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சைவ வாழ்வியற் சிந்தனைகள் |
| ஆசிரியர் | : | குமாரசாமி சோமசுந்தரம் |
| உரிமை | : | திருமதி. தையல்நாயகி சோமசுந்தரம் |
| வெளியீடு | : | ரஜி வெளியீடு, 29, முதலாம் ஒழுங்கை<br>தெஹிவளை, கொழும்பு, இலங்கை. |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 1999 |
| அச்சகம் | : | ஜே அண்ட் எஸ் சேர்விஸஸ் பிரைவேட் லிமிட்டட்,<br>115, மெஸஞ்சர் வீதி, கொழும்பு 12. |
| விலை | : | ரூபா 75/- |

| | | |
|---|---|---|
| Name of the book | : | Saiva Vazhviyal Chinthanaigal<br>(Thoughts on Saiva Way of Life) |
| Author | : | Kumarasamy Somasundaram |
| Copy Right | : | Mrs. Thaiyalnayaki Somasundaram |
| Publication | : | Raji Publications<br>29, First Lane, Dehiwala,<br>Colombo, Sri Lanka. |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 1999 |
| Press | : | J & S Services (Pvt) Ltd,<br>115, Messenger Street, Colombo 12. |
| Price | : | Rs. 75/= |

# முகவுரை

உண்மையான சைவ வாழ்வு, சிவத்துடன் சேர்ந்து வாழ்வதாகும்.

சிவம் என்பது ஒப்பற்ற பரம்பொருள். மனம், வாக்கு, காயம் என்பவற்றிற்கு எட்டாத நிலை.

"அன்பே சிவம்", எனத் திருமூலர் எமக்கு தெட்டத் தெளிவாக அறிவிக்கிறார்.

"நீதியே சிவம்" என்கிறார், மாணிக்கவாசக சுவாமிகள்.

உண்மை, நன்மை, செம்மை, அழகு – இவை யாவும் சிவம் என்பர் சான்றோர். இறைவன் திருவருளினால் நமக்கு எட்டும் நிலையில் உள்ளன இவை.

சிவத்தின் கருத்தறிந்து, அதற்கேற்ப நாம் வாழ்தல் சைவ வாழ்வு. சைவம் சிவசம்பந்தமுடையது.

சைவமக்களாகிய நாம் இயல்பாகவே சிவசம்பந்தமுடையவர்கள். ஆன்மிக வளம் கொண்டவர்கள்.

சிவசம்பந்தம் நமது உரிமை. அதனை மறுத்தல் உரிமை மீறல் ஆகும்.

சிவசம்பந்தம் என்பது அன்பு, நீதி, உண்மை, நன்மை, அழகு, செம்மை என்பவற்றினுடனான எமது சம்பந்தம்.

இன்றைய உலகமாந்தர் இவற்றுடனான தொடர்பினை விலக்கிக் கொண்டுள்ளார்கள். வாழ்வில் சிவசம்பந்தம் இல்லை. இன்றைய துன்பங்களும் துயர்களும் இதன் விளைச்சல்களே.

சிவசம்பந்தத்தை மீண்டும் ஏற்படுத்திக் கொள்ளும் பட்சத்திலேயே, இருள் அகலும். வாழ்வில் நல்லனவெல்லாம் மலரும்.

சிவத்துடன் "சேர வாரும் செகத்தீரே" – இது ஆன்மிக அழைப்பு. வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கான அழைப்பு. இதனை மறுப்பவர்கள் வாழ மறுப்பவர்கள் ஆகி விடுகின்றனர். ஏற்பவர்கள் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வர். தெய்வீக நிலையையும் எய்துவர்.

இந்நூல் "சிவ சம்பந்தம்" பற்றிய ஓர் அருட்சியை வாசகர் உள்ளங்களில் ஏற்படுத்துமாகில், அது திருவருட்பேறாகும்.

மனம், வாக்கிற்கு மேற்பட்டதான பரம் பொருளாம் சிவத்தை அன்பு, நீதி, உண்மை, நன்மை, செம்மை, அழகு, தூய்மை ஆக ஏற்று எம்முடன் சம்பந்தப்படுத்தி வாழ்வதே சைவவாழ்வு ஆகும்.

சைவ வாழ்வியல் சிந்தனைத் துளிகள் சில இந்நூலில் களஞ்சியப் படுத்தப்பட்டுள்ளன. அவற்றைக் களஞ்சியத்திலேயே தேங்கிக் கிடக்க விட்டுவிடாமல், எடுத்து வாழ்க்கையில் பயன்படுத்தும் அன்பர்களுக்கு இந்நூல் சமர்ப்பணம்.

இந் நற்சிந்தனைகளை ஒலிபரப்பிய இலங்கை வானொலியாருக்கும், குறிப்பாக அதன் தமிழ்ச் சேவைப் பணிப்பாளர் வீ.என். மதியழகன் அவர்கட்கும் என் அன்பு கலந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன். இந்நூலினை அழகுற அச்சிட்டு உதவிய ஜே அன்ட் எஸ் சேர்விஸஸ் பிரைவேட் லிமிட்டட் அச்சகத்தினருக்கும் நன்றிகள் பல.

எனது நூல்களுக்குத் தொடர்ந்து ஆதரவு நல்கி வரும் அன்பர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றிகள் உரித்தாகுக. எல்லாவற்றிற்கும் மேலாகச் சிவப்பணியில் என்னை ஈடுபடுத்திய எல்லாம் வல்ல எம்பெருமானுக்கு நன்றிகள், துதிகள் மிகப்பல.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"
"இன்பமே சூழ்க, எல்லோரும் வாழ்க."

**குமாரசாமி சோமசுந்தரம்**

29, முதலாம் ஒழுங்கை,
தெஹிவளை,
கொழும்பு,
இலங்கை
28.01.1999

# பொருளடக்கம்



குமாரசாமி சோமசுந்தரம், ஆசிரியராகத் தம் கல்விப் பணியை ஆரம்பித்தவர். இலங்கைக் கல்வி நிர்வாக சேவையில் வட்டாரக் கல்வி யதிகாரி, பிரதம கல்வியதிகாரி, கல்விப் பணிப்பாளர் ஆகிய பதவிகளை வகித்தவர். மகரகம, தேசிய கல்வி நிறுவகத்தின் (N.I.E) தமிழ்த்துறைப் பணிப்பாளராக வும், உதவிப் பணிப்பாளர் நாயகமாகவும் பணி புரிந்தவர். தற்போது கல்வித் துறை நிபுணத்துவ ஆலோசகராகக் கடமையாற்றுகின்றார்.

சென்னை, இலண்டன் பல்கலைக் கழகங்களின் பட்டதாரியான இவர், இலங்கைப் பல்கலைக்கழகத்தின் (பேராதனை வளாகம்) பட்டப்பின் கல்வி டிப்ளோமாச் சான்றிதழையும், யாழ்ப்பாணம் பல்கலைக்கழகத்தின் எம். ஏ (கல்வியியல்) பட்டத்தையும் பெற்றவர்.

சைவ நெறி, தமிழ்ப் பண்பாடு, மனித விழுமியங்கள், கல்வித் தத்துவம் ஆகிய துறைகளில் ஈடுபாடு கொண்டு, அவை பற்றி ஆராய்வதிலும், கட்டுரைகள், எழுதுவதிலும், சொற் பொழிவுகள் நிகழ்த்துவதிலும் சிரத்தை காட்டி வருபவர். பத்திரிகைகள், சஞ்சிகைகள், சிறப்பு மலர்கள் ஆகியவற்றில் கட்டுரைகள் எழுதியுள்ளார். வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலும் பங்கு கொள்கிறார். சைவ நற்சிந்தனை, மனித விழுமியங்கள் தொடர்பான இவரது வானொலி உரைகள் குறிப்பிடத்தக்கவை.

"நல்லை நகர் நாவலன்" (நாடக நூல்–1978); "சைவ மரபும் தமிழர் வாழ்வும்" (1994); "மனித விழுமியங்கள்" (1995); "நல்வாழ்விற்குரிய நடைமுறைச் சிந்தனைகள்" (1996) "சைவ விழுமியங்கள்" (1998) – இவர் எழுதி வெளியிட்ட ஏனைய நூல்கள். இவரது இரண்டு நூல்கள் வடக்கு-கிழக்கு மாகாணச் சாகித்திய மண்டலப் பரிசு பெற்றவை.

இலங்கைக் கலைக் கழகத்தின் இலக்கியக் குழு உறுப்பினராகவும், கல்வி அமைச்சின் சைவசமயக் கல்வி ஆலோசனைக் குழுவின் உறுப்பினரா கவும், இலத்திரனியல் ஊடகங்களின் (வானொலி, தொலைக்காட்சி) சைவ சமய நிகழ்ச்சி ஆலோசனைக் குழுவின் தலைவராகவும் பணியாற்றுகின்றார்.

# 1 - பிள்ளையார் பெருமை

"வெங்கரி முகமும் வியன்புழைக் கையோடு
ஐங்கர தலமும் மலர்ப்பதம் இரண்டுங்
கோடிசூரியர் போற் குலவிடு மேனியும்
பேழைபோல் அகன்ற பெருங்குட வயிறும்
நெற்றியில் நயனமும் முப்புரி நூலுங்
கற்றைச் சடையுங் கனகநீண் முடியுந்
தங்கிய முறம் போல் தழைமடிச் செவியுமாய்
ஐங்கரத்து அண்ணல் வந்து அவதரித்தும்"

என்று இவ்வாறு பிள்ளையார் கதையில் விநாயகப் பெருமானின் தெய்வீகத் தோற்றம் கூறப்படுகிறது.

சிவபெருமானின் மூத்த திருக்குமாரர், விநாயகர். தனக்குமேல் வேறொரு தலைவர் எவரும் இல்லை என்பதை உணர்த்தும் பொருளைத் தருவதாக விநாயகர் விளங்குகின்றார்.

ஓம் என்னும் பிரணவமந்திர வடிவமே கணபதியின் உருவமாகும். ஆனைமுகம், ஐந்துகரங்கள், பானை வயிறு, மூன்று கண்கள், இரு சிறிய திருவடிகள் ஆகியவற்றுடன் கூடிய திருவுருவம் விநாயகருடையது.

விலங்குத் தலையும், மனித உடம்பும், தேவர் திருப்பாதங்களும் விநாயக மூர்த்தியின் சிறப்பு அம்சங்கள். யானை முகம், ஓங்கார வடிவினர் என்பதையும், ஐந்து திருக்கரங்கள் ஐந்தொழில்களையும் தாமே நிகழ்த்துபவர் என்பதையும், மூன்று கண்கள், சூரியன், சந்திரன், அக்கினியை உணர்த்துவதையும், பெருவயிறு, எல்லா உலகங்களையும், சராசரங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளார் என்பதையும் விளக்கிக் காட்டுகின்றன.

பிள்ளையார் முதல் வணக்கத்திற்குரியவர். அவரை முதலில் வழிபட்டுச் செய்யப்படுகின்ற கருமங்கள் யாவும் எளிதில் கைகூடும். விக்கினங்கள் வராமல் காப்பவர். விக்கினங்களைத் தீர்ப்பவர் என்பதால் விக்னேஸ்வரர். விக்னராஜா என்னும் பெயர்களைத் தாங்கியுள்ளார். நாம் எழுதத் தொடங்கும் போது பிள்ளையார் சுழியை முதலில் போடுகிறோம். கருமங்கள் மாத்திரமல்ல, பூஜைகள், விழாக்கள், வழிபாடுகள், சடங்குகள், கிரியைகள் போன்ற எவற்றைச் செய்யப் புகுமுன்னரும் பிள்ளையாரை வழிபட்டே அவற்றைத் தொடங்கும் வழக்கம் எம்மிடையே நீண்ட காலமாக இருந்து வருகிறது. சைவ வழிபாட்டில் விநாயகருக்கு முக்கிய இடம் தரப்பட்டுள்ளது.

பிள்ளையார் மிகப் பெருமை வாய்ந்தவர். அவர் பிரமச்சாரியாகவும் உள்ளார். சித்தி, புத்தி என்னும் இரு சக்திகளுடன் கூடியும் விளங்குகின்றார். வெற்றியையும், விவேக புத்தியையும் நமக்கு அளிப்பவர் என்பதை மனதிற் கொண்டு சித்தியையும் புத்தியையும் பிள்ளையாருடன் இணைத்துப் பார்கின்றோம்.

பிள்ளையாரை வணங்கும்போது முட்டியாகப் பிடித்த இரண்டு கைகளினாலும் நெற்றியில் மூன்று முறை குட்டிக் கும்பிடல் வேண்டும். ஆண்கள் அட்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல் வேண்டும். இருகைகளாலும் காதுகளை மாறிப்பிடித்துக் கொண்டு பிள்ளையார் முன்னிலையில் தோப்புக் கரணம் போடுவதும், வணக்க முறைகளுள் ஒன்றாகும். பிள்ளையாரை நினைத்து தேங்காய் உடைத்தும் வழிபாடு செய்யும் வழக்கம் நம்மிடையே இருந்து வருகிறது. ஆணவ அழிப்பு, அகந்தை ஒழிப்பு இடம் பெறுதலைத் தேங்காய் உடைத்தல் குறிக்கின்றது.

விநாயகரை நோக்கி விரதங்கள் மேற்கொள்வர். அவற்றுள் விநாயக சஷ்டி விரதம் முக்கியமானது. பிள்ளையார் விரதம் என்றே இதைச் சிறப்பாகச் சொல்வர். கார்த்திகை மாதத்து அபரபக்கப் பிரதமைத் திதி முதல் மார்கழி மாதத்துப் பூர்வ பக்க சஷ்டித் திதி வரையிலுமான இருபத்தொரு தினங்கள் விநாயக சஷ்டி விரதத்திற்குரிய நாட்கள் ஆகும். விரதம் அனுட்டிக்கும் அடியார்கள், முதல்நாளில் சங்கற்பித்து, தினமும் ஒருவேளை உணவருந்தி, ஆசாரசீலராய் விளங்கி, விரதத்தை நோற்று இறுதி நாளான சஷ்டியன்று முழுநாளும் உணவு உண்ணாமல் உபவாசம் இருந்து மறுநாள் பாறணை செய்து, நிறைவேற்றிக் கொள்வர். இருபத்தொரு இழையால் ஆன நூலைக் காப்பாகக் கட்டிக் கொள்வர். இத்தினங்களில் பிள்ளையார் கோவில்களில் விசேட பூசை ஆராதனைகள், உற்சவங்கள் நடைபெறும். பிள்ளையார் பெருங்கதையை இத்தினங்களில் படிப்பதாலும் கேட்பதாலும் நிரம்பிய பலனைப் பெறுவர். கஜமுகாசுரனை வதம் செய்தவர் கணபதிப் பெருமான். ஆண்டுதோறும் பிள்ளையார் விரத முடிவில், கஜமுகாசுர சங்காரம் நிகழ்த்தி நினைவு கூறப்படுகிறது.

விநாயகரை நோக்கி மேற்கொள்ளப்படும் மற்றொரு விரதம் சதுர்த்தி விரதமாகும். ஆவணிச் சதுர்த்தி மகிமையானது.

மோதகம் பிள்ளையாருக்கு மிகவும் பிடிக்கும். அவல், கடலை, எள்ளுருண்டை, அப்பம், பொரி என்பவற்றுடன் முக்கனிகள், இளநீர், பால், தேன், கரும்பு என்பவையும் பிள்ளையாருக்கு உகந்த நிவேதனப் பொருட்கள். "பாலுந் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை நாலுங்

கலந்துனக்கு நான் தருவேன்” என்கிறார் பிள்ளையார் மீது அளவிலா அன்பு பூண்ட ஔவைப் பிராட்டியார். விநாயகரை அறுகம் புல்லினாலும் வன்னிப் பத்திரத்தினாலும் அர்ச்சித்து வழிபடுவது சிறப்பாகும். கணபதி பூஜை கைமேற் பலன் என்பர். ஆகமமுறையில் கோயில் அமைத்து பிள்ளையாரைப் பிரதிஷ்டை செய்து வழிபடுகின்றனர். பக்தி சிரத்தையோடு பசுவின் சாணம், மஞ்சள் என்பவற்றினால் பிள்ளையார் பிடித்து அறுகம் புல்லைத் தலைப்பாகத்தில் குத்தி வைத்தும் வழிபடலாம். அத்துணை எளிவந்த தன்மையர் விநாயகப் பெருமான்.

நம்பிக்கையுடன் தும்பிக் கையானைக் கைகூப்பித் துதிப்போர்க்கு, வல்வினைகள், துன்பங்கள் யாவும் நீங்கும், எல்லா நலன்களும் கிட்டும் என்பது உறுதி,

“வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம், மேனிநுடங்காது – பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.”

விநாயகனை மனம், மொழி, மெய்யினால் வழிபட்டு, அவன் அருள் பெற்று உய்வு பெறுவோமாக.

## 2 - சிவபெருமான் - முழுமுதற் கடவுள்

சிவபெருமான் சைவசமயத்தின் முழுமுதற் கடவுள். நாம் எல்லாத் தெய்வங்களையும் வணங்கலாம், வழிபாடு செய்யலாம். ஆயினும் அத்தனை தெய்வங்களின் ஊடாகவும் நமக்கு அனுக்கிரகம் செய்பவன், அருள்புரிபவன் சிவபெருமானே. "யாதொரு தெய்வங் கொண்டீர், அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார் தான் வருவர்" என்பது சைவ மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை.

சிவன், கொடிய ஆலகால விஷத்தைத் தமது கழுத்தில் வைத்திருக்கின்றார். அணு குண்டைவிட அபாயமானது ஆலகாலம். ஒரு கணநேரத்தில் அண்டங்கள் அனைத்தையுமே அழிக்கும் மகாசக்தி வாய்ந்தது. அவ்வாறு செய்யவிடாமல், ஆலகாலத்தைத் தனது கட்டுப்பாட்டில் வைத்திருக்கின்றான் நீலகண்டன். இதற்கு உயிர்கள் மீது இறைவன் கொண்டுள்ள அளப்பருங் கருணையே காரணம். கெடுதிகளையெல்லாம் தாம் ஏற்றுக் கொண்டு சகலருக்கும் சுகத்தைச் செய்பவன் என்பதால் சங்கரன் எனப் பெயர் பெறுகிறான். இக்காலத்து வல்லவர்கள் இது பற்றிச் சிந்திக்க வேண்டும்.

சர்வ நோய்களையும் தீர்க்கவல்ல கங்காதீர்த்தம் சிவனின் தலைமீது உள்ளது. அதனால் கங்காதரன் என்னும் பெயர் வந்தது. இறைவனுக்கு மூன்றுகண். நெற்றியில் இருப்பது ஞானக்கண். அறியாமை என்னும் இருளை அந்த ஞானஒளி அகற்றும் சக்தி வாய்ந்தது. முக்கண்ணன் என இறைவன் அழைக்கப்படுகிறான். தலையிலே குளுமையான நிலாவை அணிந்திருக்கிறான். பிறைசூடியாகத் திகழ்கிறான். நாம் ஒவ்வொருவரும் தலையைக் குளுமையாக வைத்திருக்க வேண்டும் என்பதை இது அறிவிக்கிறது. அங்கேதான் சாந்தம், சாத்வீகம், அமைதி நிலவும்.

சிவன், தனது கழுத்து, மணிக்கட்டுகள், தோள்கள், கணு க்கால்கள் என்பவற்றில் பாம்புகளை ஆபரணங்களாகப் பூண்டுள்ளார். கருடனைப் பார்த்துச் சௌக்கியம் விசாரிக்கின்றன. சிவன் நள்ளிரவில் யாரும் செல்ல அஞ்சுகின்ற மயான பூமியில் நடனம் ஆடுகின்றான். அதனால் "ருத்திரபூமி" என்று அழைக்கப்படுகிறது அந்த இடம். அது பயப்பட வேண்டிய இடமல்ல. மங்களகரமான இடமே என்பதை இறைவனின் இச் செயல் உணர்த்துகின்றது.

சிவன் திருவோடு கொண்டு பிச்சாண்டியாகவும் உள்ளமைபற்றிப் புராணங்கள் கூறுகின்றன. பற்றின்மை, சமத்துவம் என்பனவற்றை அது நமக்குப் போதிக்கின்றது.

இலிங்கம், சிவபெருமானின் சின்னம். திருக்கோயிலில் சிவத்தை, கருவறையில் இலிங்க வடிவில் வழிபாடு செய்கிறோம். சிவமும் சக்தியும் சேர்ந்த நிலையில் சிவலிங்கம் உள்ளது. சிவலிங்க வழிபாடு மிகத் தொன்மையானது. எல்லா வடிவங்களையும் தன்னுள் அடக்கி நிற்பது சிவலிங்கம் என்று கூறப்படுகிறது.

சிவன் என்பதன் பொருள் பெருந்தன்மை, மங்களம், நீதி, அன்பு என்பனவாகும். சிவனே இந்த உலகின் முதல் ஆசிரியன். மோனநிலையில் அமர்ந்து சின்முத்திரை மூலம் ஞானத்தை உபதேசித்தவர். மோனமென்பது ஞான வரம்பு என்பதை அருளியவர். நிறைகுடம் தளம்பாது. அரைகுறை நீரைக் கொண்ட குடமே சலசலக்கும். நிறைந்த ஞானமும் அறிவும் பெற்றவர்கள் மிக அமைதியாக இருப்பர். ஆன்றவிந்து அடங்கிய சான்றோர் அவர்கள். ஆனால், அரைகுறைப் படிப்பாளிகள் தான் கர்வம் மிக்கவராக உலக அமைதிக்கும் பங்கம் விளைவிப்பவர்கள். அவர்களுக்குத் தேவையானது சலசலப்பும் சிலுசிலுப்புமே அன்றி விஷயமல்ல. பேரறிவாளன் ஆன இறைவன் தட்சணாமூர்த்தியாக விளங்கி, மோனத்தின் பெருமையையும் ஞானத்தின் சிறப்பையும் சொல்லாமற் சொன்ன விதம் நமக்கெல்லாம் பாடமாக அமையட்டும்.

கடவுட் தன்மை என்பது பொறுமை, மன்னிப்பு மனப்பான்மை, இரக்கம், அன்பு என்பவற்றைக் குறித்து நிற்பது. நாம் கடவுளில் பற்றுள்ளவர்களாக இருப்பதென்றால், கடவுளின் த்ன்மைகளிலும் பற்றுக் கொண்டவர்களாக விளங்க வேண்டும். கடவுளை வழிபட்டுக் கொண்டு, பொறுமையை இழப்பவராகவோ, பிற உயிர்களை இம்சிப்பவராகவோ, வஞ்சிப்பவராகவோ இருந்தால் கடவுளை அழுது தொழுது நிற்பதால் ஒரு பயனும் கிட்டப் போவதில்லை. கடவுளுக்கு ஒரு முகத்தையும், பிற மனிதர்களுக்கு வேறு முகத்தையும் காட்டுகின்ற ஆசாட பூதித்தன்மை மனிதர்களிடம் இருந்து விலகும் போதுதான் சாந்தம் நிலவும்.

மனிதர்கள் எல்லாவிதமான தீயகுணங்கள் தீய நடத்தைகள் என்பவற்றிலிருந்தும் விலகி நிற்கவேண்டும். மனிதர் என்போர் மனிதத் தன்மைகளுடன் இணைய வேண்டும். முடிந்த அளவு நன்மைகளைச் செய்து பிறர்க்கு உபகாரியாக இருக்க வேண்டும். இதுவே சைவநெறி காட்டும் வாழ்க்கை முறை. சைவநெறி நின்று நல்வாழ்வு வாழ்வோமாக.

“மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்”

# 3 - சைவ வாழ்வு

சைவப் பண்பாடு என்று பெருமையாகப் பேசிக்கொள்கிறோம். உண்மையில், பேச்சோடு நிறுத்திக் காற்றோடு விட்டு விடாமல், சைவப் பண்பாட்டினை நாம் வாழ்க்கையோடு இணைத்துக் கொண்டு வாழ்ந்து வருவோமானால், அது எம்மைப் பெருமையுடையவர்கள் ஆக்கும்.

சைவத்தின் முழுமுதற் கடவுள் சிவம். சிவத்தை நம் உள்ளத்தில் அமர்த்தி, அதன் அருள் நிறைந்த காட்சியை என்றும் தரிசித்தபடி இருந்தால், நம் வாழ்வில் ஆனந்தம் நிறைந்திருக்கும். சைவப் பண்பாட்டின் அதி உயர் சிகரமாக விளங்குவது, சிவத்தை நமது இதயகமல பீடத்தில் இருத்தி வழிபடுதல் ஆகும்.

எமது இதய கமலத்திலே வீற்றிருக்கும் பரம்பொருள், அன்பு ஊற்றாக இருக்கும், கருணை வெள்ளமாகப் பாயும், அருள் பிரவாகமாகவே அமையும். இறைவன் வீற்றிருக்கும் இடம் தூய்மையானது. தூய்மையான இடத்திலேயே இறைவன் இருப்பான்.

சிவம் அமர்ந்திருக்கும் உள்ளம் தூய்மை, அன்பு, கருணை, அருள் நிறைந்திருக்கும். அவையாவும் செயல்களில் தோன்றும். அங்கு மலர்வதுதான் சைவப்பண்பாடு.

சிவத்தை உபாசனை செய்தல் என்பது அன்பினை உபாசித்தல் ஆகும். நீதியினை ஆராதித்தல் ஆகும். தெய்வீக வாழ்விற்கு அவையே ஆதாரம். எனவேதான், சிவத்தை மறத்தலாகாது என்றும், சிவத்தை அடைதலையே குறிக்கோளாகக் கொள்ள வேண்டும் என்றும் அருளாளர்கள் எமக்குச் கூறிவைத்துள்ளனர். அப்படியாயின் அன்பை மறத்தல் ஆகாது. நீதியைப் புறக்கணித்தல் கூடாது என்று பொருள்படுகின்றது. அன்பையும் நீதியையும் நாம் வாழ்வில் அடைந்தால், ஆனந்தம் ததும்பும் என்பது உறுதி.

உண்மையான சைவப்பண்பாட்டின் அடி அத்திவாரமாக அன்பும் நீதியும் விளங்குகின்றன. வாழ்வில் அன்பினைப் பேணுபவர்களும் நீதியை கடைப்பிடிப்பவர்களும் சைவர்கள் ஆவர்.

சைவப் பண்பாட்டில் சரியான சிந்தனை, முறையான பேச்சு, நீதியான செயல்கள் என்னும் அடிப்படையில் சரியானதும், ஒழுங்கானதும், நீதியானது மான வாழ்க்கை கட்டியெழுப்பப்படுகிறது. அத்தகைய சைவவாழ்வு தன்னலமற்றதும், பிறர் நலம் பேணுவதும், எவர்க்கும், எவ்வுயிர்க்கும் தீங்கு நினைக்காததும் ஆன ஓர் உயர்ந்த பண்பாட்டு வாழ்வாக அமையும்.

"என் கடன் பணி செய்து கிடப்பதே " என்னும் அப்பர் சுவாமிகளின் வாக்கு சைவப் பண்பாட்டினைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. பணி செய்தல், அதுவும் கைம்மாறு எதிர்பாராது பணிசெய்தல், பிற உயிர்களின் மீது கொண்ட எல்லையற்ற அன்பினால் நடைபெறுவது. சைவம், அன்பின் வடிவமாக இறைவனைக் காட்டுகிறது. அதேவேளை, அன்பின் வழியாக இறைவனை அடைய வழிகாட்டுகிறது.

சைவர்கள் இறைவனைக் கும்பிடுவதும் உலக நலத்திற்காகவே. நமது சமயநெறி அடிப்படையில் அன்பு நெறியாகும். மக்கள் தொண்டையே இறைவன் தொண்டாகக் கொள்ளும் நிலைப்பாட்டினைக் கொண்டது சைவப்பண்பாடு. "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் திருமூலர் வாக்கு, சைவப்பண்பாட்டின் பிழிந்த சாரம் ஆக உள்ளது.

இவ்வுலகின் கண் உள்ள எல்லா உயிர்களிடத்தும் இறைவன் வியாபித்து இருப்பதை வற்புறுத்தி, எல்லா உயிர்கள் மீதும் அன்பு வைத்து, அவற்றை ஓம்பிப் பாதுகாக்கத், தொண்டு புரிவதே இறைவனுக்குச் செய்யும் பெரும்பணி என்பதை அடிநாதமாகக் கொண்டது சைவப் பண்பாடு.

"விருந்து புறத்ததால் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று'' என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. வீட்டின் புறத்தே பசியோடு ஒருவர் இருக்கத் தக்கதாக, தான் மட்டும் உண்பது, அது சாவாமருந்தாகிய அமிர்தமாக இருந்தாலும், அது விரும்பத்தக்கது அன்று. "பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்" சைவப்பண்பாடு. எவரையும் வெறுக்காமலும், எல்லோருடனும் நட்புப் பூண்டும் வாழ்தலே சைவத்தின் வாழ்க்கை நெறி. உலகினையோ, உலக வாழ்வினையோ வெறுக்கவோ, ஒதுக்கவோ வேண்டிய அவசியமில்லை. உலகப் பற்றற்ற நிலையில், உலகிலேயே வாழ்ந்து, தத்தம் கடமைகளை ஒழுங்காகப் புரிந்து, பிறர் வாழத் தொண்டுகள் செய்து, நல்லன எல்லாவற்றையும் வளர்க்கலாம் எனச் சைவம் வலியுறுத்துகிறது. சைவப் பண்பாடு மக்களை செம்மையான, சீரான நல்வாழ்க்கை வாழ்வதற்கு இட்டுச் செல்கிறது.

"உண்மையுள்ளவனாக இரு. எளிமையாக வாழ். நேர்மையாக நட. பிற உயிர்களில் அன்பு செலுத்து. பொறுமையைக் கடைப்பிடி. நல்லதைத் துணிந்து செய். தருமம் செய். நாணயமாக இரு. எல்லோருக்கும் தொண்டு செய். இனிமையாக நடந்து கொள். நீதிநெறியில் நில். நலமே நாடுக. நலமே புரிக" - இவற்றில் தான் சைவப் பண்பாடு தங்கியுள்ளது.

சைவப் பண்பாட்டுடன் வாழ்பவர்களே சைவர்கள். சிவத்தை முழுமுதல் கடவுளாக வழிபடுபவர்கள். அவர்களே சிவநேசச் செல்வர்கள் ஆவர்.

# 4 - பிரமச்சரியம்

எங்கள் சமய நெறியின்படி, ஒவ்வொருவருக்கும் நான்கு வாழ்க்கை நிலைகள் உண்டு. இந்த நான்கு நிலைகளுக்கும் ஊடாக, அந்த நிலைகளுக்குரிய தர்மங்களை முறையாக அனுட்டித்து, தங்கள் வாழ்க்கையைச் செவ்வையாக நடத்திச் சென்றவர்கள்தான், முழுமையான நிறைவாழ்வு வாழ்ந்தவர்கள் ஆகின்றனர். வாழ்க்கை என்பது வாழப்பட வேண்டியது. அதுவும் அதற்குரிய பருவங்களுக்குரிய முறையில், அவ்வப் பருவத்திற்கென விதிக்கப்பெற்ற தர்மத்தின் அடிப்படையில் என்று கொள்வது எமது சமயம். இவ்வாறு வாழும் நெறியறிந்து வாழ்ந்தால், வாழ்க்கையை நம்பிக்கையோடும், உறுதியோடும் எதிர்நோக்கலாம். இன்பங்களையே என்றென்றும் சந்திக்கலாம். துன்பங்களைச் சந்திக்க முடியாத நிலையும் ஏற்பட்டு விடும். இந்த வகையில் எமது சமயம் ஒரு சிறந்த வாழ்க்கை நெறியாகவும் விளங்குகின்றது என்பதை நாம் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

மனிதனது வாழுங்காலம் நூறு ஆண்டுகள் என்று கொண்டு அதனை ஒவ்வொன்றும் இருபத்தைந்து ஆண்டுகள் கொண்ட நான்கு பருவங்களாக வகுத்துள்ளனர். பிறப்பிலிருந்து முதல் இருபத்து ஐந்து ஆண்டுப்பருவம், பிரமச்சரியம் என்றும், அடுத்த இருபத்தைந்து ஆண்டுப் பருவம், கிருகஸ்தம் என்றும், அதைத் தொடர்ந்து வரும் இருபத்தைந்து ஆண்டுகளைக் கொண்ட பருவம் வானப் பிரஸ்தம் என்றும், இறுதி இருபத்தைந்து ஆண்டுகளுக்குரிய பருவம் சந்நியாசம் என்றும் சொல்லப்பட்டுள்ளன.

இவற்றை முறையே மாணவப் பருவம், இல்வாழ்க்கைப் பருவம், சமூக சேவைப்பருவம், துறவுப் பருவம் எனக் குறிப்பிடலாம். ஒவ்வொரு பருவத்தினருக்கும் உரிய கடமைகள், பொறுப்புக்கள், உரிமைகள் என்பன வரையறுத்துக் கூறப்பட்டுள்ளன. இவற்றை ஒழுங்காக மேற்கொள்வோருக்கு ஒரு பொல்லாப்புமில்லை. எல்லாம் நன்மையாகவே அமையும். ஆனால் பருவந் தப்பி வாழ அல்லது பிறழ்வான நடத்தையை மேற்கொள்ள எத்தனிக்கும் போதே, வாழ்க்கையில் சீர் குலைவு ஏற்படுகிறது.

“பருவத்தே பயிர்ச் செய்” - நல்ல பயன் கிடைக்கும். “பருவந் தவறிப் பயிர்ச் செய்யாதே” - அதனால் பயன் கிட்டாது. இவ்வாறு பெரியோர்கள் கூறியுள்ளார்கள். பெரியோர் வாக்குகள் மந்திரங்கள் ஆகும். வாழ்க்கை அனுபவங்களிலிருந்து பிழிந்தெடுத்த சாரம், அந்த அந்தப் பருவத்தில் அதற்குரிய கடமைகளை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். பிறகு

பார்த்துக் கொள்வோம் என்று கடமையை நிறைவேற்றாமல் விட்டால், பருவந்தப்பி விடும். ஈரம் இருக்கும் போது விதை விதைத்தால் தான் முளைக்கும். ஈரம் வரண்டு விட்டால், விதைத்த விதை முளைக்காது.

இந்த நான்கு வாழ்க்கை நிலைகளையும், பண்டைக் காலத்தில் நடைபெற்ற முறையில், மேறகொள்ள இயலாதிருப்பினும் தற்காலச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவகையில் அவற்றை அநுசரிக்க முடியும். பிரமச் சரியம் என்பது மாணவப்பருவம். இப்பருவத்தில் ஆடம்பரங்கள், அளவுக்கு விஞ்சிய வாழ்க்கை வசதிகளைத் தவிர்த்து, தன்னை ஒறுத்து வாழவேண்டியது அவசியம். மாணவனைப் பார்த்துக் குரு கூறுவதாக அமைந்துள்ள பின்வரும் கூற்று பொருள் பொதிந்தது. “உனக்கு அறிவைத் தேடுவதில் ஆர்வம் இருந்தால், வாழ்க்கை வசதிகள் பற்றிச் சிந்திப்பதை மறந்து விடு. வசதிகளுடன் ஆடம்பரமாக வாழவேண்டும் என நீ நினைத்தால், கல்விகற்று அறிவைத் தேடும் முயற்சியைக் கைவிட்டுவிடு”. மாணவரின் படிப்பை மழுங்கச் செய்வது, எது என்றால், பெற்றோரால் அவர்களுக்கு தேவைக்கதிகமாக வழங்கப்படுகின்ற வாழ்க்கை வசதிகளும் பண வசதிகளும் தான் என்பதை இதிலிருந்து விளங்கிக் கொள்ள முடிகின்றது. கல்விக்குப் பகை வசதி வாய்ப்புக்கள் என்பதை நன்கறிந்தவர்கள் நம் முன்னோர்கள். அரச குமாரர்களாக இருப்பினும், அரண்மனையில் வைத்துக் கல்வி கற்பிக்காது, காடுகளில் அமைக்கப்பட்டிருந்த முனிவர்களின் ஆச்சிரமங்களுக்கு அனுப்பப்பட்டு, அங்கு எளிய வாழ்க்கை வாழ்ந்து கல்வி கற்றார்கள். எமது சமயம் காட்டும் பிரமச்சரிய வாழ்க்கைமுறை இதுவாகும்.

வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்யும் பருவமாகப் பிரமச்சரியம் விளங்குகிறது. இப்பருவம் மிக அவதானமாகக் கழிக்கப்பட வேண்டும். காமம், குரோதம், மோகம், செருக்கு, அழுக்காறு முதலிய அழுக்குகள் மனங்களில் படியவிடாதவாறு பார்த்துக் கொள்ளுதல் அவசியம். இவை படிந்து விட்டால், மனத்தை ஒருமுகப்படுத்த முடியாமல் போய்விடும். கவனம் கலைக்கப்பட்டு விட்டால், கல்வி கற்க முடியாது.

பிரமச்சரியம் என்பது ஒரு விரதம். அவ்விரதம் முறையாக அனுட்டிக்கப் பட்டால், ஒரு சிறந்த சமுதாயம் எதிர்காலத்தில் உருவாகும் என்பதில் நம்பிக்கை கொள்ளலாம். பெற்றோர், ஆசிரியர், பெரியோர் இதற்கு உதவ வேண்டும். சமய நெறியில் நின்று, நல்லதொரு சமுதாயம் உருவாவதற்கு உதவுவோமாக.

# 5 - நன்னம்பிக்கை

சைவர்களின் பலம் எங்கிருக்கிறது என்று கேட்டால், அது இறை நம்பிக்கையில் இருக்கிறது என்று சொல்லி விடலாம். அப்படியாயின், சைவர்களின் பலவீனம், அவர்கள் இடைக்கிடையே இறைவன்மீது கொள்ளுகின்ற அவநம்பிக்கையில் காணப்படுகிறது. சந்தேகம், நம்பிக்கையீனம், ஐயுறவு என்பன எம்மைப் பீடித்துவிட்டால், எமது மனஅமைதி, நிம்மதி, சாந்தி என்பன எம்மை விட்டு அகன்று விடும்.

எம்மில் பலர் கடவுள் நம்பிக்கை கொண்டிருக்கும் அதேவேளையில், கடவுள் இருக்கிறரா, இல்லையா? கடவுளை நம்பலாமா, வேண்டாமா? கோயிலுக்குப் போவதால் பயன் ஏதும் உண்டா? என்று வீணாக மனத்தை அலைத்துக் கொள்வதையும் பார்க்கிறோம். இது, எமது சலன புத்தியையும், உறுதியற்ற மனநிலையையும் காட்டுகிறது. எமது பலவீனம் இங்குதான் பளிச்சிடுகிறது.

ஒரே நேரத்தில் நம்பிக்கையும், நம்பிக்கையீனமும் மாறிமாறி ஏற்படும்போது மனிதனுக்குக் கிடைப்பது சஞ்சலம்தான். ஆஸ்திகர்களாயும் இருக்கவேண்டும். அதேவேளை நாஸ்திகமும் பேசவேண்டும் என்பது ஒரு இரண்டும் கெட்ட நிலை. இது, இரண்டு படகுகளில், அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கால்களை வைத்திருப்பதற்குச் சமம்.

கோயில் பிரகாரத்தில் நண்பர்களைக் கண்டதும், "எனக்கென்றால், கோயில், குளம், அர்ச்சனை, கடவுள் என்பவற்றில் நம்பிக்கையில்லை. வீட்டிலே ஒரே ஆய்க்கினை, கோயிலுக்குப் போகவேண்டுமென்று அதுதான், அவையளைக் கூட்டிக் கொண்டு வந்தனான்'' என்று பெருமிதத்தோடு பிதற்றுபவர்கள் பலரை அன்றாடம் நாம் காண்கின்றோம். என்னே, சைவர்களின் பரிதாப நிலை. கோயில், வழிபாடு, பிரார்த்தனை, பஜனை, விரதம் எல்லாம் பெண்களுக்கும் வயோதிபர்களுக்குந்தான் என்பது அவர்களின் நிலைப்பாடு போலும்.

"இன்று விரத நாள். இன்றைக்காவது மச்ச மாமிசத்தைச் சமைக்காமல் விடுவோம்'' என்று மனைவி பரிந்து பேச, "அது முடியாது, எனக்கு உந்த விரதங்களிலே நம்பிக்கையில்லை. மச்சத்தைக் காய்ச்சி வைச்சிட்டு, வேண்டுமானால் விரதத்தைப் பிடிக்கலாம்'' என்று அடம்பிடிக்கும் கணவன் மார்கள் பலரையும் நாம் காண்கின்றோம். நம்பிக்கையும் நம்பிக்கையீனமும் மாறி மாறி ஏற்பட்டால் நிம்மதி பறிபோய்விடும் என்பதை உணர்ந்து கொள்ளுதல் அவசியம்.

சந்தேகம், சபலம் என்பன வாழ்க்கைக்கு ஆகாது. அவற்றை ஆராதித்தால் சஞ்சலம்தான் கிட்டும். சைவசமய வாழ்விற்கு அடிப்படையே இறைநம்பிக்கைதான். எவை, எவை பிடிக்கவில்லையோ, அவற்றிலிருந்து முற்றாக ஒதுங்கி விடவேண்டும். அதைவிட்டுத் தினம் தினம் சந்தேகமும் சபலமும்பட்டு மனத்தையும் கெடுத்து வாழ்க்கையையும் வீணாக்கி விடக்கூடாது. நம்பவும் முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் இயலவில்லை என்கிறார்கள் சிலர். அவர்கள் பரிதாபத்திற்குரியவர்கள்.

"நான் இறைவனில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருக்கிறேன். அதனால் நான் நல்லாய் இருக்கிறேன். விரும்பியவற்றை விரும்பிய நேரத்தில் பெற்றுக் கொள்கிறேன். தெய்வநம்பிக்கையே எனக்கு ஒரு குறையுமேற் படாமல் பார்த்துக் கொள்கிறது", என்கின்றனர் ஆஸ்திகர்கள். "நம்பினார் கெடுவதில்லை, இது நான்கு மறைத்தீர்ப்பு'' என்பது உண்மையே. "கடவுளை நம்பினார் கைவிடப்படார்'' என்பது ஆன்றோரின் அனுபவ வாக்கு. சமயம் என்பது அனுபவம் என்பர். அனுபவத்தினால் அநுபூதி மான்கள் சொல்லியவற்றில் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அவற்றைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். ஒரு குறையும் வராது.

நம்பிக்கைதான் சமயத்தின் அடிப்படை. ஏன், நம்முடைய வாழ்க்கையே நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டுதான் நடைபெறுகிறது. நாளை விடியும் என்ற நம்பிக்கையில்தான், இன்று இரவு நித்தரைக்குப் போகிறோம். விதை முளைக்கும், பயிராகும், பயன் தரும் என்று நம்பிக்கையில்தான், விவசாயி விதை விதைக்கிறான். நம்பிக்கை நல்லதேயன்றிக் கூடாததல்ல.

"சீதை, பத்தினி என்ற நம்பிக்கையில்தான், இராமன் தைரியமாக இருந்தான். இராமன் வருவான் என்ற நம்பிக்கையில்தான் சீதை உயிரோடு இருந்தாள்'' என்று பெரியோர் சொல்வர். அவர்களின் நம்பிக்கை வீண் போகவில்லை.

திருநீறு முழுநம்பிக்கையோடு அணிந்தால் அது நோய்க்கு மருந்தாகி ன்றது. திருநாவுக்கரசரின் சூலை நோயைத் தீர்த்தது, தமக்கையார் திலகவதியார் தந்த திருநீறு. பாண்டியனின் வெப்புநோயை நீக்கியது திருஞான சம்பந்தரின் திருநீறு. "மந்திரமாவது நீறு'' என்கிறார் சம்பந்தர் சுவாமிகள். திருநீறு, ஒரு சம்பிரதாயமாக அன்றி, முழுநம்பிக்கையோடு அணியப் பெற்றால் நன்மைகள் கிட்டும் என்பது உறுதி. இறைவனில் நம்பிக்கை வைத்தால், அவனின் பாதாரவிந்தங்களில் நம்பிக்கையோடு வீழ்ந்து வணங்கினால், அடைய முடியாதது எதுவும் இருக்கமாட்டாது. "நம்பினால் கைகொடுப்பது நம்பிக்கை". சைவர்களின் பலம் இறைநம்பிக்கையில் தான் இருக்கிறது.

# 6 - இயற்கை கற்றுத்தரும் பாடம்

நாம் கல்வியைக் குருவிடம் கற்கிறோம். இயற்கையும் எமக்குப் பல பாடங்களைப் போதிக்கின்றது. அவற்றை வாழ்வில் அனுசரித்து நடந்தால் எமக்குத் தொல்லைகள் எதுவும் ஏற்படாது.

பூமி, அதன்மீது காணப்படுகின்ற மரஞ்செடி கொடிகள், மலைகள், ஆறுகள் என்பன நமக்கு அழகையும் வனப்பையும் வழங்குகின்றன. அதைவிட நமக்கு நல்ல படிப்பினைகளையும் போதிக்கின்றன.

உலகில் மிக்க பொறுமைசாலி பூமியாகும். எவர் என்ன செய்தாலும் மன்னிக்கும் பண்பைப் பூமி கொண்டுள்ளது.

அகழ்வாரைத் தாங்கும் நிலம் என்று வள்ளுவர் பூமியின் விசேட இயல்பைக் கூறுகிறார். நிலத்தைக் கிண்டுவோரையும், கொத்துவோரையும், வெட்டுவோரையும் கூட மன்னித்து அவர்களின் இச்செய்கைகளைப் பொறுத்து, அவர்களைத் தாங்கி வாழ்விக்கின்ற தன்மை பூமியினுடையது. பூமித்தாய் என்று பூமியை அழைக்கின்றோம். பொறுமையின் சிகரமாக உள்ள பூமித்தாயைப் பின்பற்றி நாமும் பொறுமையாக இருக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

பூமியில் காணப்படுகின்ற மரங்களும் செடிகொடிகளும் நமக்கு உபகாரம் செய்வதற்காகவே இருக்கின்றன. பிறருக்கு உபகாரம் செய்யும் பண்பை மரஞ், செடி, கொடிகளிடம் கற்றுக் கொள்ள வேண்டும்.

ஆற்று நீர் எத்துணை தெளிவாகவும் தூய்மையாகவும் ஓடுகின்றது என்பதைப் பாருங்கள். எம்முடைய மனமும் தெளிந்த நிலையிலும், தூய்மையாகவும் எப்போதும் இருப்பின் எத்துணை நலமாக இருக்கும். மனத்துக் கண் மாசிலன் ஆதல்...... அறன் என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. அழுக்காறு, அவா, கோபம், கர்வம், செருக்கு, தற்பெருமை என்பன எம் உள்ளத்தில் உறைகின்ற அழுக்குகள். அவற்றின் வெளிப்பாடுகள், உலகில் தொல்லைகளைத் தோற்றுவிக்கும் காரணிகளாக உள்ளன. இந்த அழுக்குகள் மனங்களிலிருந்து அகற்றப்பட்டால், மனங்களும் தூய்மை பெற்றுவிடும். உலகின் தொல்லைகளும் நீங்கி விடும். தூய்மை, தெளிவு ஆகிய விழுமியப்பண்புகளை ஆற்றுநீர் உணர்த்திக் கொண்டிருக்கிறது.

சூரியனால் கடலிலிருந்து உறிஞ்சப்பட்ட நீர் பின்னர் மழையாகப் பொழிவிக்கப்படுகின்றது. சூரியனுக்கு எதிலும் பற்றில்லை என்பது

தெரிகிறது. நாமும் அந்தப் பாடத்தைச் சூரியனிடமிருந்து கற்றுக் கொள்ளலாம். பற்றுத்தான் துன்பங்களின் தோற்றுவாய் என்று சமயநூல்கள் கூறுகின்றன. சூரியன் தன்னுடைய ஒளிக் கிரணங்களையும் வெப்பக் கதிர்களையும் எல்லோருக்கும் பட்சபாதகமின்றி, ஏழை-பணக்காரன், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பேதங்களின்றிக் கிடைக்கச் செய்கிறான். சமூகங்களில் ஏற்றத்தாழ்வுகள் பாராட்டாமல், சமத்துவ நோக்குடையவராக இருப்பதற்கான பாடத்தைச் சூரியனிடம் கற்றுக் கொள்ள வேண்டும்.

தேனீக்கள் பூக்களிலுள்ள தேனை மட்டுமே தேடி எடுத்துச் செல்லும். சாரத்தை மட்டும் திரட்டி எடுக்கவும் சக்கையை லிலக்கி விடவும். நாம் தேனீக்களிடம் பாடம் கற்றுக் கொள்கிறோம். எறும்புகளும் தேனீக்களும் ஒழுங்காகவும், ஒற்றுமையாகவும் வாழக் கற்றுத் தருகின்றன.

மீன் என்ன செய்கிறது. தன்னைப் பிடிப்பதற்காகத் தூண்டில் போடப்படுவதை அறியாமல் அதில் பொருத்தப்பட்டுள்ள சொற்ப உணவிற்கு ஆசைப்பட்டு ஓடிச் சென்று அதைக் கௌவுகிறது. அதனால் மீன் தன் உயிரையே இழக்கிறது. இத்தனைக்கும் அது நாவை அதிகம் வளர்த்துக் கொண்டமையே காரணம். நாவை அடக்கியிருந்தால் மீனுக்கு இந்தக் கதி நேர்ந்திருக்குமா? நாவுக்கு அடிமையாகி உண்பதிலேயே காலங்கழிப்பவரின் கதியும் இப்படித்தானாகிறது. மீனைப் பார்த்து மனிதன் கற்றுக் கொள்ள வேண்டிய பாடம் இது.

நாம் மனிதர்கள். மனிதத் தன்மைகளைப் பெற்று வாழுதலே முறையாகும். மரஞ் செடி கொடிகள் மற்றும் விலங்கினங்களை விட எவ்வளவோ கூடிய அறிவும், ஆற்றலும், விவேகமும், நல்ல சிந்தனைகளும் கைவரப் பெற்றவர்கள் நாம். அவை மட்டுமல்ல, ஆன்மிக வளம் கொண்டவர்கள். நல்லது, கெட்டது நன்கு தெரிந்தவர்கள். இந்த நிலையில் எம்மிலும் கீழ்நிலையில் உள்ள சர அசரங்கள் எமக்குப் பாடம் சொல்லித் தரும் நிலையில் இருக்க நாம் மட்டும் மனிதர்க்கே உரிய மனித விழுமியப் பண்புகளையும், அதி உயர் ஆன்மிக கலாசாரத்தையும் மெல்ல மெல்லக் கைவிட்டு, மனித குலத்தின் மாண்பினையும் மாட்சிமையையும் பழுதுபடுத்துவது முறையா, தர்மமா என்பதை சற்று ஆற அமர இருந்து எண்ணிப் பார்க்க வேண்டிய காலநேரம் வந்து விட்டது. நாம் இனியும் எம்மையும், எமது ஆன்மிக கலாசாரத்தையும், மனித தர்மத்தையும் அவட்சியப்படுத்த முடியாது. நம்மை நாம் உணர வேண்டும். எம் உள்ளே உறுபொருளைத் தரிசிக்க வேண்டும். சைவநெறி நின்று ஆன்மிகம் பேணி வாழவேண்டும். அதுவே எம் பிரார்த்தனை.

# 7 - ஒருமையுணர்வே ஆன்மிகம்

இன்று உலகம் பல கட்சிகளாகப் பிரிந்து நிற்கின்றது. இன்று நாம் வாழுகின்ற யுகம் ஜனநாயக யுகம். பல கட்சிகள் இருப்பது ஜனநாயக தர்மம் என்கின்றனர். இந்த அடிப்படையில் தர்மம், உலகியல் அடிப்படையில் மட்டும் நோக்கப்படுகிறது. தர்மம், ஆன்மிகம் சார்ந்தது. எனவே, எது தர்மம், எது தர்மம் இல்லை என்பதை ஆன்மிக நிலையில் நின்று தீர்மானிக்க வேண்டும். அப்பொழுது தான் தர்மம், தார்மிக அடிப்படையிலானதாக அமையும். ஆன்மிகம் கலக்காத உலகியல் நடவடிக்கைகளினாலேயே இன்று உலகம் குழப்பமடைய நேரிடுகிறது. ஜனநாயகம் வரவேற்கக் கூடியதே. அது எப்போதெனில் ஆன்மிக நீதியின் அடிப்படையில் அது செயற்படும் போதே என்பது உணர்ந்து கொள்ளுதல் அவசியம்.

வேற்றுமைகள் இருப்பதை ஏற்றுக் கொள்ளுதல் ஜனநாயகப் பண்பு. வேற்றுமைகள் இருப்பது இயற்கையே. அத்துடன் நிறுத்திக் கொள்வது மனித இயல்பாகியும் வருகிறது. அதனால் ஜனநாயகம் முழுமை பெறவில்லை. வேற்றுமைகள் இருப்பதை ஏற்றுக் கொள்கின்ற அதேவேளை அவற்றிற்கூடாகப் பொதுமையைக் கண்டுபிடித்து ஒற்றுமை காண்பதே உண்மையான ஜனநாயகம் ஆகும். வேற்றுமையில் ஒற்றுமைகாணல் என்பது ஆன்மிக முயற்சி என்பதை அறிந்து கொள்ளுதல் வேண்டும். உலகில் வேற்றுமைகள் இயற்கையே என்பதை ஏற்றுக் கொள்ளும் பண்பு வெறுமனே பௌதிக அறிவுசார்ந்தது மட்டும்தான். வேற்றுமையில் ஒற்றுமை காணு தல் முற்றுமுழுதாக ஆன்மிகம் ஆன செயல். ஜனநாயகத்தில் பௌதிக அறிவும், ஆன்மிக உணர்வும் சங்கமமாகும் போதே, ஜனநாயகம் முழுமைத்துவம் எய்துகிறது. அதனால் உலகம் நன்மை பெறுகிறது.

இன்று ஜனநாயகம் பௌதிக அறிவுப் பண்புகளோடு மட்டும் காணப்படுகிறது. ஆன்மிக உணர்வுகள் அங்கு செறிவதாக இல்லை. அதனால் ஜனநாயகத்தினால், பிரச்சினைகள் தீர்க்கப்படாதநிலை தொடர்கிறது. பிரச்சினைகள் இழுத்தடிக்கப்படுகின்றன. இந்நிலைக்குச் சனநாயகம் என்னும் தத்துவத்தின் மீது பிழையைப் போடுதல் சரியன்று. அந்த நல்ல சனநாயக தத்துவம், ஆன்மிகம் பேணாத மனிதர்களின் கைகளில் அகப்பட்டமையினாலேயே, இழிநிலைக்குத் தள்ளப்படுகிறது. சனநாயகம் பிழையில்லை. அதனைப் பயன்படுத்தும் மனிதர்களிலேயே பிழை உள்ளது. மனிதர்கள் பிழைக்கக் காரணம் ஆன்மிகப் பண்புகளைத் தவறவிட்டமையேயாகும்.

"உலகை ஒன்றாகக் காண்பதே காட்சி" என்று குறிப்பிடுவது ஆன்மிகம். அது நீதியாகும். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்று கூறுவது ஆன்மிகம் அதுவே நீதியாகும். "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்னும் தர்ம வாசகம் ஆன்மிகம் சார்ந்தது. அது நீதியாகும். குலம் ஒன்று, அது மனித குலம், சமயம் ஒன்று அதுவே அன்புச் சமயம். இறைவன் ஒன்று அதுவே பரம் பொருள். மனிதர்கள் அனைவரும் சகோதர உறவு பூண்டவர்கள், சமத்துவம் உடையவர்கள். ஏனெனில் ஒரே இறைவனின் குழந்தைகள்தான் நாம் எல்லோரும். இவ்வாறு ஒருமைப்பாட்டு உணர்வினை ஏற்படுத்துவது ஆன்மிகம். இதனைத்தான் ஆன்மிக ஒருமைப்பாடு என்று சைவம் உணர்த்துகிறது. ஆன்மிக ஒருமைப்பாட்டு உணர்வை அடைதல், அதனை வாழ்வில் கடைப்பிடித்தல் நமது வாழ்க்கைக் குறிக்கோளாக அமைதல் வேண்டும். நாம் வாழ்வின் குறிக்கோள்களாகப் பலவற்றை வைத்திருக்கிறோம். இவற்றை எய்துவதற்கும் கூட ஆன்மிகத்தின் துணைதான் தேவைப்படுகிறது. இன்று பலரிடம் ஆன்மிகக் குறிக்கோள் கிடையாது. ஆன்மிகக் குறிக்கோள் இல்லாது கெடுகிறார்கள். "குறிக்கோள் இலாது கெட்டேன்" என்கிறார் ஓர் அருளாளர். அவர் குறிப்பிடுவது இந்த ஆன்மிகக் குறிக்கோளையேயாகும். இன்று உலகம், "ஆன்மிகம் உண்டு" என்ற கட்சி; "ஆன்மிகம் இல்லை" என்ற கட்சி; "ஆன்மிகம் உண்டு இல்லை" என்ற நொதும்பல் கட்சி என மூன்று கட்சிகளாகப் பிரிந்து நிற்கிறது. இந்த அவலநிலைதான் உலகின் சகல பிரச்சினைகளுக்கும் அமைதியின்மைக்கும் காரணம்.

ஆன்மிகம் இல்லாதவர்க்குப் பகுத்தறிவு இல்லை. மனித நேயம், மனித தர்மம், நீதி என்பன இல்லை. இறை பக்தி இல்லை. இவைகள் இல்லாதவர்களுக்கு சாந்தி, சுகம், மகிழ்ச்சி ஏது? ஆகையினால் ஆன்மிகத்துடன் அணைந்து அவலங்களை அகற்றி, அமைதியான நல்வாழ்வு பெறுவோமாக.

# 8 – சமயச் சார்பும், சார்பின்மையும்

சமயம் என்றால் நெறி, பாதை, வழி என்று பொருள் கொள்வர். மனிதர்கள் நல்ல முறையில் வாழ்வதற்கு நெறிமுறைகளை அமைத்துத் தருவது, வழிகாட்டுவது, சரியான பாதையில் செலுத்துவது சமயம் ஆகும். சமயம் என்பது வாழ்க்கை நெறி. தனிமனித வாழ்க்கையாயினும் சரி, குடும்ப வாழ்க்கையாயினும் சரி, சமூக வாழ்க்கையாயினும் சரி, அவ் வாழ்க்கைகள் சமயம் சார்ந்ததாக அமைதல் அவசியம். சமயம் என்பதற்கு நெறி என்றும், செவ்வையான பாதை என்றும் பொருள் கண்ட நாம், சமயம் சாராத வாழ்க்கையையோ, சமூகத்தையோ, நாட்டையோ விரும்பலாமா? சமயம் சாராத கொள்கையுடையோர் என்றால் என்ன அர்த்தம்? அத்தகையவர்கள் நல்ல வாழ்க்கை நெறிமுறைகளை, செம்மையான வாழும் வழிமுறைகளை, தூய்மையான வாழ்க்கைப் பண்புகளை வேண்டாதவர்கள், விரும்பாதவாகள் இன்னும் சொல்லப் போனால் வெறுப்பவர்கள் என்றல்லவா கொள்ள வேண்டி இருக்கின்றது. சமயத்தை மறுத்தல் என்பது வாழ்க்கையை மறுத்தலாகவே அமையும் என்பதை நாம் மறந்து விடலாகாது.

சமயம் சார்ந்து இராமை என்பது ஒரு தப்பிக்கும் முயற்சி. சமய நெறிமுறைகளுக்குக் கட்டுப்படாதவர் என்ற வகையில், என்னவும் செய்யலாம். எப்படியும் நடக்கலாம் என்னும் நிலை ஏற்படுகிறது. சட்டத்தை மதிக்காதவர்களாகவும், வாழ்வில் ஒழுங்கு, கட்டுப்பாடு பேணாதவர்கள் ஆகவும், பழிபாவங்களுக்குப் பயப்படாதவர்களாகவும், ஊழல்களுக்கு இடங்கொடுப்பவர்களாகவும் நாளடைவில் வந்து விடுகின்றனர். “எனக்குச் சமயங்களில் நம்பிக்கை இல்லை” என்று கூறிவருபவர்கள், அடிதலை மாறிய வாழ்க்கையில், நெறிதவறிய வாழ்க்கையில் நம்பிக்கை கொள்ள ஆரம்பிக் கின்றார்கள் என்பதுதான் அர்த்தம். அவர்கள் கண்காணிக்கப்பட வேண்டிய வர்கள் ஆவர்.

“தந்தையையும் தாயையும் தெய்வமாகப் போற்றுக. அவர்கள் சொற் கேட்டு நட. ஆசிரியரை தெய்வமாக மதித்து நட. அவர்கள் வார்த்தைகளை மீறாதே. பெரியோர், மூத்தோரைக் கனம் பண்ணு . அவர்களின் வார்த்தை களும் வழிகாட்டல்களும் அமிர்தத்திற்குச் சமமாகும். அமிர்தம் வாழ்வளிப்பது. செய்யுந் தொழிலே தெய்வம். அதை மதித்துப் பேணி விருப்பத்தோடு செய். நாட்டின் சட்டங்களையும், சமூக ஒழுக்கங்களையும் கட்டுப்பாடுகளையும் அனுசரித்து நட. அவற்றை மீறாதே. தெய்வம் உண்டு என்றிரு. அப்போது தான் நல்லவற்றைச் செய்வாய். அல்லவற்றைச் செய்ய அஞ்சுவாய். எல்லா உயிர்களிலும் இறைவன் வியாபித்துள்ளான். அதனால் உயிர்கள்

யாவற்றிற்கும் அன்பு செய், பணி செய், அவற்றை மதித்து மரியாதை செய்." இவை அனைத்தும் சமயம். அப்படியென்றால் இவற்றை அலட்சியம் செய்தல், ஏற்றுக் கொள்ளாமை என்பதுதான் சமயம் சாராக் கொள்கையின் இலட்சியமா? என்று வினா எழுப்பத் தோன்றுகிறதல்லவா.

மனித வரலாற்றில், எத்தனையோ கண்டுபிடிப்புக்களை மனிதன் செய்துள்ளான். ஆனால் அவற்றுள் மிக அற்புதமானது சமயம் என்ற ஒரு பொருளைக் கண்டுபிடித்த அருஞ் சாதனையாகும். சமயம் இல்லாத உலகம், மனிதர்கள் வாழத்தகுந்த இடமாக இருக்க முடியாது. அது அடவி காடு ஆகவே இருக்கும். அங்கு வாழும் மனிதர்கள் மனிதர்களாக இருக்க மாட்டார்கள். அவர்கள் உயர்திணையில் இருந்து நீங்கி, அஃறிணையில் சேர்ந்து கொள்வார்கள். விலங்குகளை விடக் கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டு விடுவார்கள். எனவே, அப்படியான சமயம் இல்லாத, அல்லது சமயம் சாராத ஓர் உலகினையோ, சமுதாயத்தையோ கற்பனையில் தன்னிலும் எண்ணிப் பார்ப்பது எத்துணை சிரமமாக உள்ளது. சமயம் வேண்டாம் என்று சொல்வதன் மூலம் மனித இனம் இற்றைவரை கட்டி எழுப்பியும், கட்டிக் காத்தும் வந்த மனித பண்பாடுகளையும், மனித விழுமியங்களையும், நயத்தக்க நாகரிகத்தையும் நமது காலத்தில் சீர்குலைத்தும் சிதைத்தும் விட்டோம் என்னும் பழிச்சொல்லுக்கு நாம் ஆளாகி விடக்கூடாது. இதுவே எமது விண்ணப்பமும் பிரார்த்தனையும் ஆகும். கடவுள் உண்டு என்று இருப்பதாலும், கடவுள் இல்லை என்பதை மறத்தலாலும் தான் மனித குலத்திற்கு வாழ்வு உண்டு. சுபீட்சம் உண்டு. சுகம் உண்டு. அமைதி உண்டு என்பது உறுதியாகும்.

அதேவேளை சமயம் உண்டு, கடவுள் உண்டு என்று வாயுழையச் சொல்லிக் கொண்டு, சமயத்தைப் போர்வையாக்கி, அதற்குள் பதுங்கியிருந்து அல்லவை புரிகின்றார்களே, மனிதக் கொடுமைகளைச் செய்கின்றார்களே இந்த மாதிரி மறைந்தொழுகு மாந்தர்கள்தான் "சமயம் இல்லை" என்பவர்களை விடப் பன்மடங்கான சமய விரோதிகள். சமய வெறி கொள்ளுதல், சமயம் ஒரு பேர்தை என்போர்க்கு உதவுகிறது. "சமயம் வேண்டாம்", "சமயச் சார்பின்மை" என்னும் நிலைமைகள் உருவாவதற்கு, மறைந்தொழுகு மாந்தர்களும், சமய வெறி பிடித்தவர்களுமே பங்களிப்புச் செய்துள்ளனர். செய்தும் வருகின்றார்கள். அவர்கள் சமயத்திற்குள் இருந்துகொண்டே சமயத்தைத் தகர்ப்பவர்கள் ஆகின்றனர். இவர்கள் திருந்தி சமயிகளாக வாழப் பிரார்த்திப்போம். சமயம் உண்டு, கடவுள் உண்டு என்று இருப்போம். வாழ்க்கையை வளம்படுத்துவோம்.

# 9 - மிண்டுமனத்தவர் போமின்கள்

இந்த “மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்” என்று சம்பந்தப் பெருமான் நமக்கு உறுதியாகவும் உரமாகவும் கூறுகின்றார். சிவஞானத்தோடு சம்பந்தம் கொண்டவர் ஆதலால் திருஞான சமபந்தப் பெருமான் என அழைக்கப்படுகின்றார். தமது மூன்றாம் வயதிலே, பிரம்ம விட்டுணு க்கள், இந்திரன் முதலிய தேவர்கள் ஆகியோரால் கூடக் காண்டற்கரிய சிவபெருமானை, உமாதேவி சமேதராய், இடபாரூடராய் கண்டு களித்து, ஆனந்திக்கும் அரும் பேறு பெற்றவர். அத்தோடு உலகமாதாவாகிய உமையவளிடம் ஞானப் பால் உண்டு. ஞானத்தின் திருவுருவாக மலர்ச்சி பெற்றவர்.

“சிவனடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்”

ஆகியவற்றை நிரம்பப் பெற்ற தவமுதல்வர் சம்பந்தர் என்று சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் சிறப்பித்துக் கூறுகின்றார்.

இத்துணை பெருந்தகுதியும், பெருந்தகைமையும், பெருஞ் சிறப்பும் கொண்ட திருஞான சம்பந்தப் பெருமான், எம்மை நோக்கி “இந்த உலகத்தில் நல்லவண்ணம் வாழலாம்; இன்பமாக வாழலாம்; இனிமையோடு வாழலாம்; அமைதி பெற்று வாழலாம்; சாந்தியுடன் வாழலாம்” என்று கூறுகின்றார். அத்தகைய நல்வாழ்விற்கு உரிய நல் வழியையும் காட்டுகின்றார். அப்படியிருக்க, நாம் ஏன் வாழ்வில் நம்பிக்கையை இழக்க வேண்டும்? துன்பங்களை ஏன் சந்திக்க வேண்டும்? காரணம் என்னவெனில், நம்மில் அநேகர் “மிண்டு மனத்தவர்” ஆகி வருவதேயாகும்.

நையாத மனம், கல்மனம், ஈரமில்லாத மனம், உருகாத மனம் கொண்டோர் மிண்டு மனத்தவர். இவர்கள் மண்ணில் நல்ல வண்ணம் வாழ மறுப்பவர்கள். மற்றையோரையும் நல்ல வண்ணம் வாழ விடாமல் தடுப்பவர்கள். “மிண்டு மனத்தவர் போமின்கள். மெய்யடியார்கள் விரைந்து வம்மின்.......” என்று திருப்பல்லாண்டு பாடிய சேந்தனார் அறை கூவுகின்றார். மிண்டு மனம் நம்மிடமிருந்து அகலவேண்டும். அப்பொழுதுதான் மெய்யடியார்கள் ஆக நாம் மாறமுடியும்.

மெய்யடியார்கள் உண்மையை உணர்ந்தவர்கள். பொய்ம்மையைத் தவிர்ப்பவர்கள். இறைவன், உலகம் எங்கும் அங்கிங்கெனாதபடி நீக்கமற

நிறைந்துள்ளான் என்னும் பேருண்மையை உணர்ந்தவர்கள். பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யமாட்டார்கள். பிற உயிர்களுக்குத் தீங்கு செய்தல் என்பது இறைவனுக்குத் தீங்கு செய்தலுக்கு ஒப்பாகும். இறைவனுக்கு தீங்கு செய்ய யார்தான் ஒருப்படுவார்?

தனக்கென்று தன் குடும்பத்தவர்க்கென்று வாழ்பவர்கள் மிண்டு மனத்தவர் வரிசையைச் சேர்ந்தவர்கள். உண்மையை அறியாதவர்கள். அவர்கள் சிறியர்கள். அவர்களால்தான் உலகத்து அமைதிக்குப் பங்கம் ஏற்படுகின்றது. உலகில் சாந்தியும் சமாதானமும் நிலவ வேண்டுமானால், மக்கள் பிறர்க்கென்று வாழும்நிலை ஏற்படவேண்டும். சைவநெறி இதனைத் தெளிவாகக் கூறுகின்றது.

சைவ நெறியில் நிற்கவேண்டும். அருளாளர்கள், அனுபூதிமான்கள் வாழ்ந்து காட்டிய வழியைப் பின்பற்ற வேண்டும். இவர்கள் அனைவருமே பிறர்க்கு இடையூறுகளை ஏற்படுத்தாத, இடைஞ்சல் செய்யாத வாழ்க்கையை வாழ்ந்து காட்டியவர்கள். திருக்கோயில் சென்று கும்பிடுவதும், வழிபாடு செய்வதும் கூடப் பிறர் நலனுக்குத்தான், என்னும் எண்ணம் கொண்டவர்கள்.

"அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்
ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்"

என்று இறைவனை வேண்டுகிறார் ஓர் அருளாளர். மிண்டு மனத்தவரால் அன்பு செய்ய இயலாது. அன்பு செய்ய இயலாதவர், எப்படி மண்ணில் நல்ல வண்ணம் வாழ முடியும். ஆகவே, மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்கு நாம் ஒவ்வொருவரும் அன்பு மனத்தினர் ஆகவேண்டும். "அன்பீனும் ஆர்வமுடைமை" என்பது வள்ளுவர் வாக்கு. அன்பின் காரணமாகவே ஒருவரில் கரிசனை கொள்கின்றோம். பிறரில் கரிசனை கொண்டு, அவர்களுக்கு உதவும் போது, வாழ்வு சுவைக்கிறது. அப்போது சமூகத்தில் சாந்தி நிலவும், சமாதானம் ஓங்கும்.

"மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்ற அப்பர் சுவாமிகளின் கூற்று, எத்துணை சிறப்பு வாய்ந்தது என்று உணரப்படும். மனித்தப் பிறவி வெறுப்பதற்குரிய ஒன்றல்ல. கிடைத்தற்கரிய மனிதப் பிறவியை நமக்கு வழங்கிய இறைவனுக்கு நன்றி சொல்ல வேண்டும். அன்பு செய்ய, ஆர்வம் காட்ட, அருள் பொழிய, தியாகம் செய்ய, சேவை ஆற்ற மனிதப் பிறவி நமக்கு வாய்ப்பாக உள்ளது. எனவே, நமக்குக் கிடைத்த இந்த அரிய மனிதப் பிறவியை துர்ப்பிரயோகம் செய்யாது, மிண்டு மனத்தவர் ஆக இருக்காது. அன்பு மனத்தவர் ஆகி, வாழ்ந்து, இன்பம் பெற்று மனிதப் பிறவி எடுத்ததன் பயனை அடைவோமாக.

# 10 - சைவத்தை வாழ்வோடிணைப்போம்

சைவர்களாகிய நாம், சைவ அனுட்டானங்கள், சைவமரபுகள், ஆசாரங்களை வாழ்க்கையில் மேற்கொண்டு ஒழுகுதல் வேண்டும். சைவ சமயத்தவர் என்று சொல்லவோ, விபூதி, சந்தனம், குங்குமம் தரிக்கவோ, விரதங்கள் அனுட்டிக்கவோ வெட்கப்படக் கூடாது. பஜனை கூட்டுப் பிரார்த்தனைகளில் பங்குபற்றும் போது, நாமும் சேர்ந்து தோத்திரங்களைப் பாட வேண்டும். இறைவன் நாமங்களை உரத்துச் சொல்ல வேண்டும். சொல்லச் சொல்லப் புண்ணியம் பெருகும். பாவங்களும் வினைகளும் தீரும். பஞ்ச புராணம் முறையாகப் பாடப் பயின்றிருக்க வேண்டும். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, சேக்கிழார் பெரிய புராணம் என்னும் ஒழுங்கில் பஞ்சபுராணம் அமைகின்றது. பஞ்சபுராணம் ஓதுவதற்கு முன்னும் ஓதி முடிந்த பின்னும் "திருச்சிற்றம்பலம்" சொல்ல வேண்டும். பஞ்ச புராணம் பாடி முடிந்த பின்னர் திருப்புகழ் மற்றும் இஷ்டதெய்வங்களின் மீது பாடப் பெற்றதோத்திரப் பாமாலைகளைப் பாடலாம். திருமுறைகளை இசைப்பதற்குக் கூச்சப்படக் கூடாது. குரல் நல்லாயில்லை என்று கூறுகிறார்கள். அதெல்லாம் சாக்கு போக்கு. இறைவன் மீது "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" தேவாரங்களையும் திருமுறைப் பாக்களையும் ஓத ஓத குரல் வளமும், இசைப் பண்ணும் தாமாக வந்து சேரும். பக்தியும் நம்பிக்கையும் கைவரப் பெற்றால், பயம் போய்விடும். பயமும் கூச்சமும் முன்னேற்றத்திற்குப் பரமவிரோதிகள்.

சமய வைபவங்களில், திருமுறைகள் பாடி முடிந்ததும் "நம பார்வதி பதயே" என்று உரத்துக் கூறப்படும் போது, அங்குள்ளோர் "அரகர மகா தேவா" என்று சொல்வர். மூன்று முறைகள் இவ்வாறு சொல்லப்பட வேண்டும். அதன் பின்னர் "சிற்சபேசா" என்னும் போது "சிவசிதம்பரம்" என்றும் "தென்னாடுடைய சிவனே போற்றி" என்னும் போது "எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்றும் "இன்பமே சூழ்க" என்னும் போது "எல்லோரும் வாழ்க" என்றும் அங்குள்ளோர் வழுத்துதல் மரபு. ஆனால் வந்திருப்பவர்களில் ஒரு சிலர் மாத்திரம்தான் வாய்விட்டு உரக்கச் சொல்கின்றனர். அவர்கள் புண்ணியம் உள்ளவர்கள். இன்னும் சிலர் ஒப்பாசாரமாக அவற்றை வாய்க்குள் முணுமுணுக்கிறார்கள். அதுகூடப் பரவாயில்லை. ஆனால் பலர் வாயைத் திறப்பதேயில்லை. அவர்களுக்கு வெட்கம் வந்துவிடுகிறது போலும். சில சமயம், "நம பார்வதி, பதயே" என்று சொன்னவரே, "அரஹர மகாதேவா" என்றும் சொல்ல வேண்டியுள்ளது. சைவர்களின் நிலை இவ்வாறு வந்துவிட்டது.

நாம் மனிதராகப் பிறந்தது, உண்ணவும், உடுக்கவும் உறங்கவும், பொருள் தேடவும், உத்தியோகம் பார்க்கவும்தான் என்று பலர் நினைக்கின்றார்கள். வாழ்க்கை இயந்திரமயமாகிவிடக் கூடாது. சம்சார சாகரத்தில் என்றும் மூழ்கியிருத்தல் ஆகாது என்பதனால்தான் இறைபக்தி, வழிபாடு, ஆன்மிகம், சமயம், பிரார்த்தனை என்றெல்லாம் நம் முன்னோர்கள் வகுத்துத் தந்துள்ளனர். இவற்றை நாம் அலட்சியம் செய்வதால்தான், அமைதியின்மை, மனச்சஞ்சலம், உடற்பிணிகள், மனநோய்கள், அழுத்தங்கள் மத்தியில் காலத்தைக் கடத்த வேண்டியவர்களாக இருக்கிறோம். நான் சந்தோஷமாக இருக்கிறேன் என்று மனம் விட்டுக் கூறுபவர்கள் அரிதினும் அரிது. பொருள், பண்டம், பதவி, புகழ், அதிகாரம் உள்ளவர்களும் அவற்றால் மகிழ்ச்சி, திருப்தி, சுகம் என்பவற்றைப் பெறுவதாக தோன்றவில்லை. இதற்குரிய காரணத்தை ஆராய்ந்து அறிதல் அவசியம்.

மனித வாழ்க்கையில் உலகியல் தேவைகள் மட்டுமல்ல அவற்றிற்கு அப்பால் ஆன்மிகத் தேவைகளும் இருக்கின்றன என்பதை நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். தெய்வ பக்தி, இறைவழிபாடு, பூசை, ஆராதனை, திருமுறைகள் பாராயணம் என்பன மனிதரை ஆன்மிகத்தை நோக்கி செலுத்துகின்றன. எவ்வித சுகபோகங்கள் இருந்தும், ஆன்மிகம் இல்லையேல் அவற்றால் பயனில்லை. வாழ்வும் சுவைக்காது. ஆன்மிக ஈடுபாடு தான் மனிதனின் வாழ்க்கைச் சுமையைத் தணிக்க வல்லது. சமய அனுஷ்டானம், இறைபக்தி, தியானம், இறைவன் புகழ் பாடுதல், கேட்டல், புராண இதிகாசங்களைப் படித்தல் என்பவற்றில் ஈடுபடுவதால், வீண் விவகாரங்களில் மனதையோ மற்றும் புலன்களையோ செலுத்தாமல் தவிர்த்துக் கொள்ள முடியும். அதனால் நாம் அடைபவை நிம்மதி, அமைதி, சந்தோஷம் ஆகியவை. இப்பேறுகளை வேற எந்த மூலங்களிலுமிருந்தும் பெற்றுக் கொள்ள முடியாது. இந்த உண்மையை நாம் உணர்ந்து, எம் பிள்ளைகளை இளம்பராயத்திலிருந்து சமய அனுட்டானங்களிலும், தெய்வ வழிபாடு, பக்தி என்பவற்றிலும் ஈடுபாடு கொள்ள ஊக்குவிக்க வேண்டும். வீட்டிலும், பாடசாலைகளிலும் சமயச் சூழலை ஏற்படுத்திக் கொடுத்தல் இன்றியமையாதது. வளர்ந்தவர்கள், பெரியவர்கள் முன்மாதிரியாக நடந்து கொள்ளும் போதுதான், இளைஞர்களும் சிறுவர்களும் சமய விஷயங்களில் ஈடுபாடு கொள்வர். எதற்கும் நேரம் இல்லை என்று சொல்லிக் கொண்டு எத்தனையோ காரியங்களுக்கு நேரத்தைக் கண்டுபிடித்து விடுகிறோம். மனமிருந்தால் சமய காரியங்களுக்கும் சொற்ப நேரத்தை ஒதுக்கிக் கொள்ள முடியும். நம் ஒவ்வொருவரினதும் நலன்கருதி, எம்மீது கருணை கூர்ந்து, சைவ ஒழுக்கங்களை வாழ்வில் பேணு வோமாக.

# 11 – பகுத்துண்டு பல்லலுயிரோம்புதல்

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்" மிகச் சிறந்த தர்ம காரியம் என்று சைவநீதி கூறுகிறது. நான் மட்டும் வாழ்ந்தால் போதும், மற்றவர்களைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை என்ற போக்கு சைவநீதிக்கு முரணானது. நம்மிடம் உள்ள செல்வத்தை மற்றையோருடன் பகிர்ந்து கொள்வதினால் ஏற்படுகின்ற மகிழ்ச்சி, இன்பம், திருப்தி என்பன மிகவும் மகத்துவம் மிக்கவை. ஏனெனில் அவை அறவழியில் சம்பாதிக்கப்பட்டவை.

முன்னொரு காலத்திலே இரந்தி தேவர் என்னும் பெயருடைய மன்னன் நீதி தவறாது அரசாட்சி செய்து வந்தான். ஒரு கால எல்லை வரை அரச பரிபாலனம் செய்து விட்டு, காட்டுக்குச் சென்று மனையாளுடன் வானப்பிரஸ்த ஆசிரம வாழ்க்கையை நடத்த வேண்டுமென்று அம்மன்னன் தீர்மானித்தான். இது அக்கால வாழ்க்கை நடைமுறை. இரந்திதேவ மன்னன் தம்முடைய செல்வங்களைச் சாதிபேதமின்றி மக்களுக்குத் தானமாக வழங்கிவிட்டு மனையாளுடன் காடேகினார். வானப்பிரஸ்த வாழ்க்கையை மேற்கொண்டனர். நற்செய்கை, நற்கருமங்களில் ஈடுபடலா னார். எல்லோருக்கும் சேவை செய்வதைத் தொண்டாக ஏற்று நடத்தினார்.

பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையாக, இரந்தி தேவரின் மனைவி விளங்கினாள். கணவனின் குறிப்பறிந்து வாழ்பவள் மனைவி. மனைவியின் குறிப்பறிந்து வாழ்பவன் கணவன். காதலிருவர் கருத்தொருமித்து வாழ்வதால் கிடைப்பது இல்லற இன்பம். இல்லற வாழ்க்கையைத் தொடர்ந்து வருவது வானப்பிரஸ்த வாழ்க்கை. அங்கு பற்றற்ற நிலையில் கணவனும் மனைவியும் கருத்தொருமித்து சேவை செய்து காலங்கழிப்பர். சேவை செய்வதிலும் இருவரின் கருத்து உடன்பாடு இருத்தல் அவசியம். கணவன் மனைவிக்கு இடையில் கருத்துக்களில் உடன்பாடு இருத்தல் வேண்டும். முரண்பாடு எஞ்ஞான்றும் இருக்கக் கூடாது என்பது சைவநீதியாகும்.

வானப்பிரஸ்த ஆசிரம வாழ்க்கையில் விரதம் அனுட்டித்தல், உபவாசம் இருத்தல், இறைசிந்தனை, சேவை என்பன முக்கியமாக இடம் பெறும்.

இரந்தி தேவர், நாற்பத்தெட்டு நாள் உபவாச விரதம் ஒன்றினை அனுட்டித்தார். நாற்பத்தெட்டு நாட்கள் அன்னம், நீர் உட்கொள்ளாமல் இறைவனைத் தியானித்த வண்ணம் விரதத்தை மேற்கொண்டார். உபவாசம் என்பது இறைவன் உடன் வாசம் செய்தல் என்று பொருள்.

நாற்பத் தொன்பதாம் நாள் காலையில் விரதத்தைப் பாரணை செய்து

முடித்துக்கொள்ள வேண்டும். அதற்கான ஆயத்தங்கள் செய்யப்பட்டன. தேவையான அளவு உணவும் சேகரிக்கப்பட்டு, பாரணை செய்யவிருக்கும் நேரம், அங்கு பசியுடன் வந்த அந்தணன் ஒருவன் தனக்கு உணவு தரும்படி இரந்திதேவரைக் கேட்டான். நாற்பத்தெட்டு நாள் உண்ணா நோன்பின் பின்னர், உணவு அருந்தி விரதத்தை நிறைவு செய்யும் நேரம், அந்தணன் வந்து பசிக்கு உணவு கேட்ட போது, தான் உண்ண வைத்திருந்த உணவில் பாதியை அவனுக்குக் கொடுத்தார். அதையிட்டு இரந்தி தேவர் மகிழ்ச்சி எய்தினாரேயன்றி சிறிதும் மனச் சஞ்சலம் அடையவில்லை. அச்சமயம் இன்னொருவனும் பசியுடன் அங்குவந்தான். அவனுடைய நிலையைக் கண்டு இரங்கி, அவனுக்கும் தம்மிடம் மிகுதியாயிருந்த உணவில் ஒரு பகுதியைக் கொடுத்தார். அவனும் உண்டு பசியை ஆற்றினான்.

அதன்பின்னர், நாய் ஒன்று வாலைக் குழைத்துக் கொண்டு பசியுடன் வந்து இரந்தி தேவர் முன் நின்றது. தம்மிடமிருந்த மிச்ச உணவையும் நாய்க்குக் கொடுத்து விட்டு பால், கொஞ்சம் இருந்தது. அதனைப் பருகி விரதத்தை நிறைவு செய்ய எண்ணினார். அந்தச் சமயத்தில் எங்கெங்கோ எல்லாம் அலைந்து திரிந்து விட்டுத் தாகத்தோடு வேடன் ஒருவன் அங்கு வந்தான். இரந்தி தேவர் முன்போய், "எனக்குத் தாகமாக இருக்கிறது. எங்கு தேடியும் தாகத்தைத் தணிப்பதற்கு எதுவும் கிடைக்கவில்லை. தாகம் தீர ஏதாவது குடிக்கக் கொடுத்தால் நான் உயிர் தப்பிப் பிழைப்பேன்" என்று கேட்டான்.

அப்பொழுது இரந்திதேவர் வேடன் மீது இரக்கங் கொண்டு, தான் பருக வைத்திருந்த அந்தக் கொஞ்சப் பாலையும் அவனிடம் கொடுத்து அவனின் தாகத்தைத் தணித்தார். அவர் சிறிதேனும் வருந்தவில்லை. "எனக்கு உணவோ பாலோ வேண்டுவது இல்லை. பிறரின் பசியைப் போக்க என்னிடம் உள்ள உணவு முழுவதையும் கொடுப்பதிலேயே நான் திருப்தியும் ஆனந்தமும் அடைகிறேன். மற்றையோரின் துயரை நீக்குவதில் ஏற்படும் மகிழ்ச்சிக்கு எல்லை கூறமுடியாது" என்று சொன்னார். அப்பொழுது இறைவன் மகிழ்ந்து, அவர்முன் தோன்றி இரந்தி தேவரின் செயற்கரிய செயலை வியந்து, அவருக்கு ஆறுதல் உண்டாகும்படி அனுக்கிரகம் செய்து மேலான பதவியையும் வழங்கினார். அவருடன் அங்கு இருந்தவர்களும் பெரும் பேறுகளைப் பெற்றனர்.

"யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி" என்கிறார் திருமூலர். "உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை "விரதமாகும், தவமும் ஆகும் என்கிறார் திருவள்ளுவர். இரந்தி தேவர் வரலாறு இவற்றிற்கு எடுத்துக் காட்டாக உள்ளது.

# 12 - கோபுர தரிசனம்

சைவ ஆலயச் சிறப்புக்களுள் ஒன்றாகக் காட்சியளிப்பது, ஆலயத்தின் நுழைவாயிலில் வானளாவ ஓங்கி வளர்ந்து காணப்படும் இராஜ கோபுரம் ஆகும். "கோபுர தரிசனம் கோடி புண்ணியம்" என்று சைவ சமய நூல்களும், சைவச் சான்றோர்களும் கூறுவதிலிருந்து ஆலய கோபுரத்தின் சிறப்பு தெளிவாகின்றது.

திருக்கோயிலில் மூலவர் அமர்ந்துள்ள இடம், மூலஸ்தானம் என்றும் கர்ப்பக் கிருகம் என்றும், கருவறை என்றும் அழைக்கப்படுகிறது. அதன்மீது அமைக்கப்படுவது விமானம். குடமுழுக்குப் பெற்ற கோயில்கள் யாவற்றிலும் விமானம் உண்டு. ஸ்தூபி என்றும் விமானம் அழைக்கப்படுகிறது. அதன் முடியில் கலசம் அமைக்கப்பட்டிருக்கும். கும்பாபிஷேகத்தின் போது விமான த்தின் மீதுள்ள கலசத்திற்குக் குடமுழுக்குச் செய்தல் விசேட அம்சமாகும்.

ஆலய வாயிலில் அமைக்கப்படும் இராஜகோபுரம் எல்லாக் கோயில்க ளிலும் காணப்படுவதில்லை. ஆகமவிதிப்படி கோபுரங்களை அமைப்பிப்பது சிவபுண்ணிய கைங்கரியமாகும். ஆலய கோபுரத்தைத் தூலலிங்கம் என்பர். வெகுதூரத்தே வரும்போது கண்ணிற்குப் புலப்படுவது கோபுரமாகிய தூலலிங்கமே. அதனால் முதல் தரிசனம், கோபுர தரிசனமாக மிளிர்கின்றது. "கோபுர தரிசனம் பாபவிமோசனம்" ஆகும். கொடிய வினைகள் யாவும் நீங்கப் பெற்றுவிடுகின்றன.

ஆலய தரிசனம் செய்யப் புகுவோர், தூலலிங்கமாகிய திருக்கோபுர த்தை முதலில் தரிசித்து, இரண்டு கைகளையுஞ் சிரசிலே குவித்த வண்ணம், சிவநாமங்களை உச்சரித்துக் கொண்டு, கோபுர வாயில் ஊடாக, கோயிலுக்குள்ளே போதல் வேண்டும் என நாவலர் பெருமான் குறிப்பிட்டுள்ளார்.

திருக்கோபுரங்கள் கலை அழகும், அருட்பொலிவும் நிறைந்து காணப் படுபவை. இறைவனின் அருட்கோலங்கள், திருவிளையாடல்கள் என்பவற்றை சிற்பங்களாக வடித்து, கோபுரங்களில் அமைக்கப்பட்டிருக்கும் அழகு மிகு காட்சிகள் கண்ணு க்கும் கருத்துக்கும் பெருவிருந்தாய், ஆன்மிகக் கலை கலாசார விளக்கமாய் விளங்குகின்றன. திருக்கோபுரம் ஆழ்ந்து, அகன்று, நெடிது, உயர்ந்து காணப்படுவது. அதனால் அறிவுக்கும் ஒப்பானது.

திருக் கோபுரத்தை அண்ணாந்து பார்க்கும் ஒவ்வொரு தடவையும், அந்த உயர்ந்த கோபுரம் நமக்கு எவற்றை உணர்த்துகின்றது. "கோபுரம் போன்று உன் உள்ளமும் உயர்ந்ததாக இருக்க வேண்டும். உன்நோக்கு உயர்வானதாக விளங்க வேண்டும். உயர்வானதைப் பற்றியே சிந்தி.

உயர்வானதைப் பேசு. உயர்வான காரியங்களிலேயே ஈடுபடு. உயர் வாழ்க்கையை நோக்கியே நடை போடு. உயர்வான மனிதர்களுடனேயே சேர்ந்து கொள். உண்மையே உயர்ந்த பொருள். உண்மையே இறைவன். அந்த உயர்வான உண்மையையே தேடு, நாடு, அடை.'' உயர்ந்த திருக்கோபுரம் ஒவ்வொரு தடவையும் அண்ணாந்து, அதனைத் தரிசனம் செய்யும்போது இவற்றையே நமக்கு எடுத்து உணர்த்துகிறது. "உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல்'' என்கிறது திருக்கோபுரம்.

திருக்கோபுரத்தை தரிசிக்கின்றோம், ஆனால் ஒரு முறையாவது, அது உணர்த்தும் உண்மையை நாம் கருத்திற் கொள்கின்றோமா என்பது சிந்திக்கற்பாலது.

நாம் எஞ்ஞான்றும் மேல் நோக்கிச் செல்ல வேண்டுமே தவிர, கீழ் நோக்கி இழிவானவற்றில் கருத்தைச் செலுத்துதல், அவற்றை அடைய எத்தனித்தல் ஆகாது. இந்த நோக்கிலேயே, கோபுரத்தை மேல்நோக்கி, அண்ணாந்து பார்த்துத் தரிசனம் செய்கின்றோம்.

இறைவனின் கருத்தையே, இறைவனின் சின்னமான கோபுரம் எடுத்துக் கூறுகின்றது. இறைவனின் கருத்தை ஏற்று நடந்தால் நன்மை. ஏற்காமல் நம் மனம் போன போக்கில் நடந்தால் தொல்லைகளும் துன்பங்களும் ஏற்படத்தான் செய்யும்.

"உயர்ந்த கோபுரங்கள், ஆனால் தாழ்ந்த எண்ணங்கள்'' - சைவமக்களின் சிந்தனைக்கு இது சமர்ப்பணம். கோபுரங்களைப் பெரிதாகக் கட்டிவிட்டால் மட்டும் போதாது. வெறுமனே தரிசனம் செய்தாலும் போதாது. அவை நமக்கு உணர்த்தும் உண்மைகளை உணரவேண்டும். உணர்ந்து வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும்.

எத்தனையோ கோபுரங்களில் மரம், செடி, கொடிகள் முளைத்து வளர் வதைக் காண்கின்றோம். அவ்றைக் கண்டும் அகற்றாமல் விட்டு விடுகி றோம். அம் மரங்கள் வேர்விட்டு வளர்ந்து கோபுரத்தை உடைத்து விடும் என்ற எண்ணமும் பலரிடமும் இருப்பதில்லை. அவ்வாறுதான், எம்முடைய உயர்ந்த உள்ளங்களிலும் அழுக்காறு, ஆசை, கோபம், பகைமை முதலிய உணர்ச்சிகளை வளரவிட்டால், எமது உள்ளங்களைப் பழுது பண்ணிவிடும்.

உயர்ந்த கோபுரங்களில் வளரும் தாவரங்களை அகற்றிக் கோபுரங்க ளைப் பாதுகாத்தல் புண்ணிய கைங்கரியம். அவ்வாறே எமது உள்ளங்களில் உள்ள அழுக்குகளையும் நீக்கி, உள்ளங்களை உயர்ந்தநிலையில் பேணி வருதல் ஆன்மிகம் ஆகும்.

"மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"

# 13 - கடவுள் உண்டு

சிறுவர்கள் சிலர் ஒரு மேசையைச் சுற்றி நிற்கிறார்கள். மேசைமீது சில கடதாசித் துண்டுகளும், வேறு பொருட்களும் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை வைத்த கண் வாங்காமல் அச்சிறுவர்கள் பார்த்துக்கொண்டு, அசைவற்று நிற்கிறார்கள். அப்போது மேசைமீதிருந்த கடதாசித் துண்டுகள் பறந்து செல்கின்றன. துண்டுக் கடதாசிகள் பறந்து செல்லும்பொழுது, அங்கு நின்ற ஆசிரியர், அதற்கான காரணத்தைக் கேட்கிறார். அதற்கு, அச்சிறார்கள், காற்று வீசியதால், கடதாசித்துண்டுகள் அடித்துச் செல்லப்படுகின்றன என்கின்றனர்.

அதற்கு ஆசிரியர் சிறுவர்களைப் பார்த்து, "அது எப்படி உங்களுக்குத் தெரியும்? காற்றைக் கண்ணால் கண்டீர்களா? காற்றுத்தான் கடதாசித் துண்டு களை அள்ளிச் சென்றது என்ற முடிவிற்கு எப்படி வந்தீர்கள்?" என்று கேட்டார்.

மாணவர்களுள் ஒருவன் பின்வருமாறு கூறினான். "காற்று கண்ணுக் குத் தெரிவதில்லை என்பது உண்மைதான். அதனால் காற்றே இல்லை என்று சொல்ல முடியாது. காற்றை நாம் உணருகின்றோம். காற்று எம் உடல் மீது படும்போது அதை உணருகிறோம்" என்றான்.

மற்றொரு மாணவன், "மரம், செடி, கொடிகள், காற்று வீசுவதினா லேயே அசைகின்றன" என்றான்.

இன்னொரு மாணவன், தன்னுடைய அனுபவத்தை இப்படிக் கூறினான். "எங்களுக்குப் பட்டம் விடுவதில் விருப்பம் அதிகம். பட்டம் பறக்கிறதென்றால் அங்கே காற்று இருக்கிறது என்பதுதான் அர்த்தம்."

வேறொரு மாணவன், "காற்று இருப்பதால்தானே, நாங்கள் எல்லோரும் உயிர் வாழ்கிறோம். காற்றில்லாமல் எந்த உயிரும் உயிர் வாழ முடியாது" என்ற தானறிந்த உண்மையைக் கூறிவைத்தான்.

அந்த நேரத்தில் ஆசிரியர், "காற்று இருப்பது கண்ணுக்குத் தெரிவதில்லை. ஆனால் காற்று இருக்கிறது என்று திடமாகக் கூறுகிறீர்கள். அத்துடன், ஒரு பொருள் கண்ணுக்குத் தெரிவதில்லை என்பதைக் கொண்டு, அந்தப் பொருள் இல்லை என்று சொல்வதும் தவறு என்கிறீர்கள், அப்படித்தானே" என்கிறார்.

"ஆமாம்" என்று மாணவர்கள் ஆமோதித்தார்கள்.

"சரி, இரவிலே ஆகாயத்தை அண்ணாந்து பார்க்கிறீர்கள். அங்கு

என்ன காண்கிறீர்கள். சொல்லுங்கள்" என்றார் ஆசிரியர்.

"ஆகாயத்திலே இரவிலே சந்திரனைக் காண்கிறோம். நட்சத்திரக் கூட்டங்களையும் காண்கிறோம்" என்றனர் மாணவர்கள்.

"இரவிலே கண்சிமிட்டுகின்ற விண்மீன்களும், தண்ணொளி தருகின்ற நிலாவும், பகலிலே காணப்படுவதில்லையே. அவை எங்கே போய் விடுகின்றன?" என்று கேட்டார் ஆசிரியர்.

அதற்கு மாணவர், "அவை எங்கேயும் போய் விடுவதில்லை. பகலிலும் ஆகாயத்திலே அந்த இடங்களிலேயேதான் உள்ளன. சூரிய ஒளியின் பிரகாசத்தில், விண்மீன்களின் ஒளி தாக்குப் பிடிக்க முடியாமல் மங்கி விடுகின்றன. அதனால் வெகுதூரத்தில் பூமியிலுள்ள எமக்கு அவை தெரிவதில்லை" என்றனர்.

"நல்ல விளக்கம். விண்மீன்கள், சந்திரன் என்பவற்றின் விஷயங்களும், ஒரு பொருள் கண்களுக்குப் புலப்படவில்லையென்றதனால், அப்படியொரு பொருள் இல்லை என்ற தீர்மானத்துக்கு வரமுடியாது என்று நீங்கள் முன்பு சொன்னதற்கு சான்றாக அமைகின்றன. அப்படித்தானே."

இவ்வாறு ஆசிரியர் கேட்டதற்கு, மாணவர் "ஆமாம்" என்று தலையசைத்தனர்.

"இன்னுமொரு விஷயம் சொல்லப் போகிறேன்" என்ற ஆசிரியர் அதனைப் பின்வருமாறு கூறினார். "மரங்களும், செடிகளும் சாய்ந்து விழுந்து போகாமல் அவற்றிற்கு ஆதாரமாகவும், உணவு, நீர் என்பவற்றால் அவற்றைப் போஷித்து வாழ்வித்துக் கொண்டும் இருப்பவை அவற்றின் அடியிலுள்ள வேர்கள். நிலத்தின் கீழ்வேர்கள் இருப்பதால், நம் கண்களுக்குத் தெரிவதில்லை. ஆனால் வேர்கள் இல்லாமல், மரஞ் செடிகள் இருக்க முடியுமா?" என்று ஆசிரியர் கேட்டதற்கு மாணவர், "இருக்க முடியாது. வேர்கள் தானே தாவரங்களுக்கு ஆதாரம். அவை நிலத்தின் கீழ் மறைந்திருப்பதனால், இல்லையென்று சொல்ல முடியாது. அவை எங்கள் கண்ணுக்குத் தோன்றாமல் இருக்கலாம்" என்றனர்.

ஆசிரியருக்கு ஒரு நல்ல சந்தர்ப்பம். சரியாகப் பயன்படுத்திக் கொண்டார். "காற்று, பகலிலே நட்சத்திரங்கள், மரஞ் செடிகளின் அடி வேர்கள் என்பன எங்கள் ஊனக் கண்களுக்குத் தெரிவதில்லை. ஆயினும் அவை உள்ளன என்று நீங்களே அடித்துக் கூறிவிட்டீர்கள். கண்ணுக்குப் புலப்படாத காற்றுத்தான் சகல சீவராசிகளையும் உயிருடன் வைத்திருக்கின்றது.

கண்ணுக்குப் புலப்படாத அடிவேர்கள்தான் மரம், செடிகளின் வாழ்வை உறுதிசெய்கின்றன. கண்ணுக்குத் தெரிகின்ற இந்த உலகம், மனிதர்கள் யாவற்றையும் படைத்துக் காப்பவன் இறைவன். சிவபெருமான் என்று இறைவனைச் சைவர்கள் அழைக்கின்றனர். இறைவன்-சிவம் எங்கள் கண்ணு க்குப் புலப்படுவதில்லை. மனம், வாக்கு, காயத்திற்கு எட்டாதது. உங்கள் கருத்துப்படி கண்ணால் காண முடிவதில்லை என்ற ஒரே காரணத்தால் ஒரு பொருளை இல்லை என்று சொல்லக்கூடாது. கண்ணுக்குத் தெரிவதை விடக் கண்ணு க்குத் தெரியாத ஒரு பொருளே மிகவும் வலிமையும் முக்கியத்துவமும் வாய்ந்ததாக இருக்கலாமல்லவா. இந்த அடிப்படையில் இறைவன் உண்டு என்று கொள்வோம். அவன் சர்வத்திலும் வியாபித்துள்ளான். வல்லவன் அவன். உயிர்க்கு உயிரானவன் இறைவன் எனத் தெரிகிறதல்லவா.

# 14 - கடவுளின் பேரருள்

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் "கடவுள்" பற்றிக் கூறிய சீரிய கருத்துக்களை ஈண்டு நோக்குவோம்.

இந்த உலகம் ஆவது சித்தும் அசித்தும் என இருவகைப்படும் பிரபஞ்சமாம். சித்து என்றால் அறிவுடைய பொருள் என்றும் அசித்து என்றால் அறிவில்லாத பொருள் அல்லது சடப் பொருள் என்றும் பொருள் படும். உலகம் தோன்றி நின்று அழியுங் காரியமாய் உள்ளது. காரியத்திற்கு ஒரு காரணம் நிச்சயமாக இருக்கும். ஆதலால் உலகம் என்னும் காரியத்தைப் படைப்பதற்கும் காப்பதற்கும் பின் ஒடுக்குவதற்கும் ஆக கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பது நிச்சயம் ஆகும். சைவமக்கள் அக்கடவுளை சிவபெருமான் என அழைக்கின்றனர். உலகத்திற்குக் கருத்தா யாவர்? என்ற வினாவிற்குரிய விடை சிவபெருமான் என்பதாகும்.

சிவபெருமான எப்படிப்பட்டவர் என்ற வினா அடுத்து எழுகிறது. அவர் என்றும் உள்ளவர். அவருக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை. அவர் எங்கும் நிறைந்தவர். அவர் இல்லாத இடம் இல்லை. அவர் எல்லாம் அறிபவர். அவர் அறியாதது ஒன்றுமில்லை. அவர் பேரறிவு படைத்தவர். உலகில் நடை பெறுகின்ற நன்மைகளையும் தீமைகளையும் உடனுக்குடன் அறிந்து கொண்டுதான் இருக்கிறார். அவருடைய அறிவு இயற்கை அறிவு. ஒருவர் அறிவித்த பிறகுதான் அறிபவரல்லர். கடவுள் எல்லாம் வல்லவர். அவரால் ஆற்ற இயலாத கருமம் என்று ஒன்றில்லை. அவர் பேரானந்தமாக உள்ளவர். வேண்டுதல், வேண்டாமை இலாதவர். அவர் தம் வயமுடையவர். ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர். அவருக்கு மேலாக வேறொரு தலைவர் இல்லாதவர். அவர் எல்லா உலகத்திற்கும் ஒரே நாயகர். அவரின்றி ஓரணுவும் அசைய மாட்டாது.

அவர் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையுஞ் செய்பவர். ஆனால் அவற்றில் ஒரு செயல் தன்னிலும் அவருடைய பிரயோசனத்தைக் கருதியதன்று. எல்லாம் ஆன்மாக்கள் மீது அவர் கொண்ட அளப்பருங் கருணையினால், அந்த ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு அவரினால் நடத்தப்படுந் தொழில்களே.

சிவபெருமான இவ்வைந்து தொழில்களையும் தமது சக்தியைக் கொண்டு செய்கின்றார். சக்தி என்னுஞ் சொல்லுக்குப் பொருள் வல்லமை என்பதாகும். சிவபெருமானுக்குச் சக்தி உமாதேவியார் ஆவர். சக்தி பின்ன

மிலான் எங்கள் பிரான் என்று சைவசித்தாந்த நூல்கள் கூறும். வரம்பில்லாத ஆற்றலை, வல்லமையை, சக்தியைக் கொண்டு விளங்குபவர் சிவபெருமான்.

சிவபெருமானுடைய திருக்குமாரர்களாக விநாயகர், வைரவர், வீரபத்திரர், சுப்பிரமணியர் விளங்குகின்றனர். இவர்கள் சிவமுகூர்த்தங்களே ஆவார். சிவனும் இவர்களும் ஒன்றே.

கடவுள், ஆன்மாக்கள் பொருட்டு வேதம், ஆகமம் என்னும் முதனூல் களை அருளிச் செய்தார். தேவாரம், திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகளும் மற்றும் சாத்திர நூல்களுமாகிய மெய்கண்ட சாத்திரங் களும் அம் முதனூல்களின் சாரமாக எழுந்த நூல்கள். வேதசிவாகமங்கள், அவற்றின் வழிநூல்கள் என்பவற்றிலே விதிக்கப்பட்டவையெல்லாம் புண்ணியங்கள். விலக்கப்பட்டவையெல்லாம் பாவங்கள்.

புண்ணியங்களாவன, கடவுளை வழிபடுதல்; தாய், தகப்பன், குரு, ஆசிரியர் முதலிய பெரியோர்களை வணங்குதலும், அவர்களை ஓம்புதலும், அவர்களின் சொற்கேட்டு நடத்தலும்; உயிர்களுக்கு இரங்குதல், இம்சை செய்யாது இருத்தல், உதவுதல்; உண்மை பேசுதல், செய்ந்நன்றியறிதல்; நல்லொழுக்கத்தை மேற்கொள்ளுதல்; எல்லோர் மீதும் அன்பாயிருத்தல் முதலான நற்செயல்கள், நற்கருமங்களில் ஈடுபடுதல் ஆகும்.

பாவங்களாவன, கொலை, களவு, மதுபானம் அருந்துதல், புலால் உண்ணு தல், பொய் பேசுதல், வியபிசாரம், சூதாடல்; பிற உயிர்களுக்குத் தொல்லைகள் துன்பங்கள், இடையூறுகளை விளைவித்தல்; தாய், தந்தை, பெரியோர்களை உதாசீனஞ் செய்தல்; அவர்களைப் பராமரிக்காது அலட்சியம் செய்தல், செய்ந்நன்றி மறத்தல், இலஞ்சம் ஊழல்களில் ஈடுபடல் முதலிய தீய செயல்களில் ஈடுபடுதல் ஆகும். பிறருக்கு நன்மை செய்யாவிட்டாலும், இத்தீய காரியங்களிலும், தீய செயல்களிலும் ஈடுபடாமல் தவிர்த்துக் கொண்டாலே போதும், அவை புண்ணியங்கள் ஆகிவிடும்.

கடவுள், புண்ணியத்தைச் செய்த ஆன்மாக்களுக்கு இன்பத்தையும், பாவத்தைச் செய்தோருக்குத் துன்பத்தையும் கொடுப்பார். கடவுளை உள்ளன்போடு வழிபடுவதன் மூலம் துன்பத்தைத் தாங்கும் வல்லமையைப் பெற்றுக் கொள்ள முடியும். பாவத்தை அனுபவித்தே தீர்க்க வேண்டியுள்ள தால்தான், பாவங்களைச் செய்யாது தவிர்த்துக் கொள்ள வேண்டும் என நூல்கள் கூறுகின்றன.

கடவுள், பாவங்கள் செய்தவர்க்குத் துன்பங்களைக் கொடுத்தலினால், அவரை வன்கண்ணரென்று கொள்ளலாகாது. அதுவும் அவர்கள் மேல்

கொண்ட கருணையினாலேயேதான் துன்பங்களைக் கொடுக்கிறார். கடவுள் கருணாமூர்த்தி. இங்கு செய்வதை மறக்கருணை என்பர். தவறு செய்த பிள்ளைகளைப் பிதா மாதாக்கள் கண்டிப்பதும் தண்டிப்பதும் அவர்களைத் திருத்துவதற்காகத்தான். வைத்தியர்கள் சில நோயாளிகளுக்குச் சத்திரசிகிச்சை செய்வது, நோயைக் குணப்படுத்துவதற்காகத்தான். இச்செயல்கள், செய்யப்படுவது, சம்பந்தப்பட்டவர்கள் இடத்துள்ள இரக்கத்தினாலேயேயன்றி வன்கண்மையினால் அல்ல என்பது எங்களுக்கு விளங்கும். அதுபோலக் கடவுள் பாவஞ் செய்தவர்களைத் தண்டித்தல், அப்பாவத்தை ஒழித்து மேலே பாவஞ் செய்யாவண்ணம் தடுத்து அவர்களை நல்வழியில் செலுத்தி உய்வித்தலுக்கு ஏதுவாதலினால் அதுவும் கருணையேயாம் என்கிறார் நாவலர் பெருமான்.

எனவே துன்பத்தைக் கண்டு துவண்டு விடாமல், எல்லாம் நன்மையின் பொருட்டே என்று கருதிக் கடவுளை உள்ளன்போடு வழிபட்டுத் தாங்கும் வல்லமையைப் பெறுதல் வேண்டும். துன்பம் எம்மைச் சுடச்சுட, நாம் கடவுளை நெருங்கிப் போக வேண்டும். கடவுளின் கருணையே கருணை.

கடவுள் பற்றி நாவலர் பெருமான் தந்த விளக்கத்தைப் புரிந்து கொண்டு, கடவுளைச் சிக்கெனப்பிடித்து, இடைவிடாது வழிபாடு செய்து இன்பவாழ்வு வாழ்வோமாக.



# 15 - தருமம் - I

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் "தருமம்" பற்றிக் கூறிய நல்வாக்குகளை ஈண்டு கருத்தில் கொள்வோம்.

எமக்குக் கருவி கரணங்களோடும், நிறைவான அவயவங்களோடும், புத்தி, விவேகம், அறிவு என்பவற்றோடும் சரீரத்தைக் கொடுத்தருளினவர் பரமபதியாகிய சிவபெருமானே. எம்மிடமுள்ள பொருள்கள், சொத்துக்கள், பணம் முதலிய செல்வங்கள் அனைத்தும் அப்பெருமானால் எம்மீது கொண்ட அளப்பருங்கருணை காரணமாக உபகரிக்கப்பட்டவையே. இந்தச் சரீரத்தையும், இத்துணை பொருள் பண்டங்களையும் ஆன்மாக்களாகிய எமக்குத் தந்தருளிய கடவுளுடைய திருக்கருத்து யாது? என நாம் எப்போதாவது சிந்தித்ததுண்டா? அவ்வாறு ஆற அமர இருந்து சிந்தித்துப் பார்த்தால், எமக்கு வழங்கப்பட்ட இப்பொருட்கள், பணங்கள், பண்டங்கள் எல்லாம் நாம், நாம் நமக்கு மட்டும் செலவு செய்வதற்கும், அனுபவிப்பதற்கும் தான் தரப்பட்டவை அல்ல என்னும் உண்மை தெரியவரும்.

அப்படியாயின், தங்களுக்கும் பிறருக்கும் சரீர சுகத்தின் பொருட்டும் ஆன்ம சுகத்தின் பொருட்டும் தம்முடைய பொருள்களைச் செலவு செய்ய வேண்டும் என்பதே கடவுளின் திருவுளக் கருத்து ஆகும் என்பது புலப்படும். இவ்வுண்மையை உணர்ந்தவர் ஞானியாவர். கடவுளின் கருத்தை அறிந்தவரே ஞானி.

ஆன்மா, சரீரம் என்பன இரு வேறு விடயங்கள் எனச் சமயநூல் கூறும். "நான்" என்று கூறுவது இந்த உடம்பையல்ல என்பதும், "நான்" என்று சுட்டுவது ஆன்மாவையே என்பதும் எம்மால் அறிந்து கொள்ளப்பட வேண்டியவை. ஆன்மா வேறு. சரீரம்வேறு. இரண்டும் பிறப்பினால் இணைக்கப்படுகின்றன. ஆன்மா அழிவற்றது. ஆனால் பஞ்சபூதச் சேர்க்கையினால் ஆன சரீரம் தோன்றி ஒடுங்கும் தன்மையது. எனவே, ஆன்ம சுகமே மிக மேலான சுகம் என்பர் அறிவுடையோர். அதனால் ஆன்ம சுகத்தின் பொருட்டே பொருள் செய்யப்பட வேண்டும் என்பர்.

ஆன்ம சுகத்திற்குக் காரணம் சரீர சுகமே என்னும் கருத்தினை நாவலர் பெருமான் முன்வைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது. ஆரோக்கிய மான உடலில்தான் ஆரோக்கியமான ஆன்மா இருக்க முடியும். சரீரசுகம் வேண்டாமென்று ஒதுக்கிவிட முடியாது. எமது இந்தச் சரீரம், அழுக்கன்று. இழுக்குமன்று. உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம் என்று

கொள்வது எங்கள் சைவமரபு. உடம்பை ஒறுக்கவோ, உருக்குலைக்கவோ சைவம் அனுமதிப்பதில்லை. எனவே கடவுளால் நமக்குத் தரப்பட்ட இந்தச் சரீரத்தின் சுகத்தையும் நலனையும் நன்கு பேணி வரவேண்டியது சமயக் கடமையாகும். எனவே, ஆன்ம சுகம் வேண்டி நிற்பவர்கள் சரீர சுகத்தை அலட்சியம் செய்தல் ஆகாது. ஆதலினால் சரீர சுகத்தின் பொருட்டுப் பொருளைச் செலவு செய்வதும், ஆன்ம சுகத்தின் பொருட்டே என்று தெளிந்து ஆன்ம சுகத்தையே நாடல் வேண்டும் என்று நாவலர் பெருமான் குறிப்பிட்டுள்ளார்.

எல்லோரும் இவ்வுண்மையைத் தெளிந்து தமக்குக் கடவுள் அருளிச் செய்த பொருளை அவர் திருவுளக் கருத்தின்படியே செலவு செய்து சரீர சுகத்தையும் அது நெறியாக ஆன்ம சுகத்தையும் அடைதல் வேண்டும். அப்படிச் செய்யாது கடவுளின் விருப்பத்துக்கு மாறாக, வீண் செலவு செய்வோரும், பாதகங்களில் முதலீடு செய்வோரும், இலஞ்சம் ஆகக் கொடுப்போரும், பொருளைக் கொண்டு துர்நடத்தை, குற்றச் செயல்களில் ஈடுபடுவோரும், உலோபத் தனத்தினால் பதுக்கி வைப்போரும், நற்காரியங் களுக்குச் செலவு செய்யாதோரும், கடவுளின் திருவுளக் கருத்துக்கு எதிராகச் செயல்படுபவர்கள் ஆவர். அதனால் கடவுளாலே தண்டிக்கப்படுவர்.

ஈதல் அறம் ஆகும். தம்மால் வருந்திச் சம்பாதித்த பொருள்களைத் தாமும் அனுபவியாமல், தங்கள் தாய், தந்தையர் மற்றும் உறவினர், சுற்றத்தவர்கள், ஏழைகள், நலிந்தோர் ஆகியோருக்கும் கொடுக்காமல், புதைத்து வைத்திருப்பது தருமம் ஆகாது. பொருளைத் தருமவழியில் செலவு செய்ய வேண்டும். அதேவேளை அதர்ம வழியில் செலவு செய்யவும் கூடாது. கடவுள் பொருள் பண்டங்களை நமக்குத் தருவது, பிறருக்கும் அவை பயன்பட வேண்டும் என்னும் கருத்திலேயேதான் என்பதை நாம் உணர்தல் அவசியம். நாம் பங்கீடு செய்பவராக விளங்க வேண்டுமே தவிரப் பதுக்கி வைப்பவராக இருத்தல் கூடாது. “யாவர்க்குமாம் உண்ணும் போது ஒரு கைப்பிடி” என்கிறார் திருமூலர். கொடுத்து வாழ்பவன் குடியே செழித்து வாழும் என்பர்.

சிலர், தாங்கள் விதம் விதமாக உண்ணலும், உடுத்தலும், குடித்தலும், கும்மாளமடித்தலும், சிற்றின்ப நுகர்ச்சியும் தான் மனிதப் பிறப்பாலாகிய பயன் என்று நினைந்து, எல்லாப் பொருள்களையும் அவைகளின் பொருட்டே செலவு செய்கின்றார்கள். மற்றும் சிலர் மதுபானம், வியபிசாரம், சூது முதலியவற்றில் பொருள்களைச் செலவழித்து, பாவங்களுக்குத் தாங்களே காரணர் ஆகின்றார்கள்.

இவர்கள் யாவரும் நல்லறிவும் நல்லோரிணக்கமும் இல்லாமையினாலே, தாம் தேடிய பொருள்களையெல்லாம் வீணிலே செலவு செய்து, பின் கடன்பட்டும் செலவு செய்கின்றார்கள். அதனால் பலர் சரீர சுகத்தோடு ஆன்ம சுகத்தையும் இழந்து வறுமையுற்று வருந்துகிறார்கள்.

எனவே, தீயவழியில் பொருளைச் செலவு செய்வதைத் தவிர்த்து, கடவுளின் திருவுளக்கருத்தை உணர்ந்து நல்ல வழிகளில் தருமம் செய்து, சரீரசுகமும் ஆன்மசுகமும் பெற்று இனிது வாழ்வோமாக.

# 16 - தருமம் - II

சிலர் பகட்டுக்கும், பகிரங்க விளம்பரம் வேண்டியும் கொடையில் ஈடுபடுகிறார்கள். இது தருமம் ஆகாது. வலது கை கொடுப்பதை இடதுகை அறியாமல் கொடுப்பதே தருமம் ஆகும். ஏனெனில் தருமத்திற்கு விளம்பரம் ஜென்மப் பகை என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். கைம்மாறு கருதிக் கொடுப்பது கொடையன்று. அதற்குப் பெயர் வியாபாரம். நாலுபேருக்கு விளம்பரப்படுத்திக் கொடுப்பதும் கொடையன்று. அதற்குப் பெயர் வியாபார உத்தி அல்லது உபாயம். அறவிலை வணிகராகக் கொடையாளிகள் விளங்கக்கூடாது என்பது நாவலர் பெருமானின் விருப்பம். அறம் விலை கூறிவிற்கக் கூடிய பண்டம் அன்று என்பது சைவத்தின் நிலைப்பாடு.

பசிதாகங் கொண்டு தங்கள் வீட்டு வாயிலில் வந்து இரந்து நிற்கும் ஏழைகள், நலிந்தோருக்கு ஒருபிடி அன்னம் தன்னிலும், ஒரு குவளை நீர் தன்னிலும் விருப்பத்தோடு கொடுத்து அவர்களின் பசிப்பிணியைப் போக்க மனம் இல்லாதவர்கள், பசியற்றவர்களை வருந்தி அழைத்துப் பெருவிருந்து வைத்துத் தங்கள் செல்வச் செழிப்பைப் பறைசாற்றுகிறார்களே, இது எப்படி தருமம் ஆகும். இல்லாதவர்க்கு ஈய்வதே தருமம் ஆகும்.

சற்பாத்திரருக்குக் கொடுப்பதே அறம். அசற்பாத்திரருக்குக் கொடுப்பது பாவம் எனச் சைவநூல்கள் கூறும். யார் இந்தச் சற்பாத்திரர்கள்? தான தருமங்களைப் பெறுவதற்குத் தகுதி பெற்றவர்கள், சற்பாத்திரர்கள் ஆவர். தகுதி என்பது இங்கு தேவையை அடிப்படையாகக் கொண்டு நிச்சயிக்கப் படுகிறது. ஏழ்மை, ஊனம், நோய், உழைக்க இயலாமை, வயோதிபம், அகதியாக்கப்படல், இழப்பு, வேறுவிதத்தில் நலிவு முதலியன பிறரிடம் உதவி பெறுவதற்கான தேவையை ஏற்படுத்துகின்றன. இத்தேவையே சற்பாத்திர ராகும் தகுதியை வழங்குகின்றது. தேவையற்றவர்கள் என்போர் அசற்பாத்திரர்கள்.

நாவலர் பெருமான் தமது கருத்துக்களை மேலும் ஆணித்தரமாகக் கூறுகையில், சரீரசுகம், ஆன்மசுகம் என்னும் இரண்டிற்கும் ஏதுவாகிய கல்வியிலே மிக்க விருப்பமும் ஆர்வமும் உள்ள வறிய பிள்ளைகளுக்குக் கவலையற்றிருந்து கல்வி கற்கும் பொருட்டு அன்னம், வஸ்திரம், நூல்கள், இருப்பிடம் என்பனவற்றை இலவசமாக வழங்கி உதவுவது உத்தம தர்மம் என்கிறார்.

தேவாலயத் திருப்பணிக்கும், நித்திய பூசைகள் முதலியனவற்றை முட்டின்றி நடத்துவதற்கும், மகிமை பொருந்திய புராதன ஆலயங்களைத் திருத்திப் புதுக்குவிப்பதற்கும், அங்கு பூசை, உற்சவங்களை விதிப்படி

நடத்துவிப்பதற்கும் பொருள் உதவிபுரிதல் தருமச் செயல்களாகும். புராதன ஆலயங்கள் கிலமாய் அழிந்து கிடக்க, தேவாலயங்களில் பூசை ஆராதனைகள் நடைபெறாமல் மூடிக் கிடக்க, தெய்வ சந்நிதிகள் விளக்கேற்றப்படாமல் இருண்டு கிடக்க, மக்கட் சமுதாயத்தில் அமைதி, சாந்தம், நிம்மதி, சமாதானம் நிலவும் என்று எதிர்பார்ப்பது அறிவீனம். சரீரசுகம், ஆன்ம சுகம் என்னும் இரண்டுக்கும் ஏதுவாகிய ஆலய வழிபாடு, பூசை உற்சவங்கள், ஆலய பரிபாலனம் என்பன சிறப்பாக விதிப்படி நடைபெறுவதை உறுதிப்படுத்தல், சரீரத் தொண்டுகள், பொருளுதவிகள் என்பனவற்றைச் செய்தல், யாவும் சிவபுண்ணியங்கள் ஆகும். எனவே பசுபுண்ணியங்களிலும் சிவபுண்ணியங்களிலும் பொருள், பணம் முதலியவற்றைச் செலவு செய்வதுதான் உத்தம தருமம் ஆகும். ஏனைய பழி பாவங்களையும், துன்பங்கள் இடையூறுகளையும் தருவிக்கும் வகையில் சம்பாதித்த பொருள்களைச் செலவு செய்வது பெரும் அதர்மம் ஆகிவிடுகின்றது. வருந்திச் சம்பாதித்த பொருள்களைச் சோம்பேறிகளுக்கும், பாதகஞ் செய்வோர்க்கும் வழங்குவதால், அவற்றை வழங்கியவர்கள், இப்பாதகர்களின் பஞ்சமா பாதகங்களுக்குத் துணை போபவர்கள் ஆகிவிடுகின்றனர் என்பது நாவலரின் கருத்து. தமது பொருள்களை இவ்வாறு பாழுக்கிறைத்து, குளிக்கப் போய்ச் சேறு பூசிக் கொள்வார் போலத், தருமஞ் செய்யப் போய் பாவத்தையே தேடிக் கொள்கின்றார்கள்.

இவர்கள் ஆன்ம சுகத்தை விரும்பாது, அற்ப சுகம் ஒன்றாகிய, ஒரு சிலரால் புகழ்பாடப்படுதலையும், முகஸ்துதியையும் விரும்புகிறவர்களாக உள்ளனர். அதனால் தாமும் கெட்டு, மற்றையோர் சுகத்தையும் கெடுத்து விடுகிறார்களே என்று நாவலர் பெருமான் ஆதங்கப்படுகிறார்.

இவைகளுக்கெல்லாம் காரணம் அவர்களிடம் நல்லறிவு இல்லாமையேயாகும். நல்லறிவு கல்வி கேள்விகளினாலன்றி வேறு விதத்தில் வராது. ஆதலினாலே தருமஞ் செய்யப் புகுவோர், தருமங்கள் பற்றியும், தருமங்கள் செய்யும் கிரமங்கள், முறைகள் பற்றியும் கற்றறிந்து கொண்டாயினும், கற்றறிந்தவரிடத்தில் கேட்டறிந்து கொண்டாயினும், விதிப்படி செய்யவேண்டும் என்று நாவலர் குறிப்பிட்டுள்ளார்.

நல்லோரிணக்கமும், நல்லறிவும் உடையவராகி தங்கள் பொருளிலே தங்கள் தேவைகளையும் பூர்த்தி செய்து மற்றதைத் தங்கள் ஆன்மிக சுகத்தின் பொருட்டு உத்தம தருமங்களிலும் செலவு செய்பவர்கள் இகபரசுகம் இரண்டையும் அடைவார்கள். அறிவுடையோர் வாய்ப்படும் நிலையுள்ள புகழையும் அடைவார்கள். நாவலர் பெருமானின் இவ் வழிகாட்டலைப் பின்பற்றி வாழ்ந்து உய்வு பெறுவோமாக.

# 17 - சைவப்பழக்க வழக்கங்கள்

"மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"

சைவமக்கள் எத்துணை நம்பிக்கையைக் கடவுள் மீது வைத்திருக்கின் றார்களோ, அத்துணை நம்பிக்கையை சைவ ஒழுக்கங்கள், ஆசாரங்கள் மீதும் கொண்டு அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடிப்பவர்கள் ஆகவும் விளங்க வேண்டும்.

நாள் தோறும் சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னே நித்திரை விட்டெழுந்து, கடவுளைத் தியானித்து, தோத்திரஞ் செய்து கொண்டு, அவசிய கருமமும் சௌசமும் தந்த சுத்தியும் முடித்து, ஸ்நானம் பண்ணி சந்தியா வந்தனம் முதலிய கருமங்களைச் செய்தல் வேண்டும். இவ்வாறு நாவலர் பெருமான் குறிப்பிட்டுள்ளார். ஐந்து நாழிகை என்பது இரண்டு மணித்தியாலங்களுக்குச் சமமான நேரம்.

திருக்கோயில், ஆறு, குளம், கிணறு, பூந்தோட்டம், வீடு முதலியவ ற்றிற்கு அண்மையிலும், அவையுள்ள பகுதியிலும், மனிதர்கள் சஞ்சரிக்கும் இடங்களிலும், பசு மேயும் நிலங்களிலும், மரநிழல், உழுத நிலம், பயிர் நிலம், பாதைகள், அறுகம்புல் உள்ள இடம், புற்று, தண்ணீர் என்பவற்றின் மீதும் மலசலம் கழித்தல், எச்சில் துப்புதல் முதலிய அசுத்தங்களைச் செய்தல் ஆகாது.

மயிர், எலும்பு, முள், உமி, குளித்த நீரால் நனைந்த நிலம், பலியிட்ட சாம்பர், எச்சில், மலம், சலம், இரத்தம் என்னும் இவைகள் மீது கால் படாமல், அவற்றை மிதியாமல், விலகி ஒதுங்கிப் போதல் வேண்டும். மனிதர்கள் படுத்திருக்கும் நிலையில் அவர்களைக் குறுக்கே கடக்கக் கூடாது. மனிதர்களையோ, மற்றும் விலங்குகள், பறவையினங்களையோ கால்களால் தொடுதலோ, உதைத்தலோ ஆகாது. தெரியாமல் ஒருவர் மீது கால் பட்டுவிட்டால் உடனே அவரை மன்னிப்புக் கேட்டுவிட வேண்டும்.

சவரஞ் செய்து கொண்டாலும், பிறப்பு இறப்பு வீடுகளுக்குப் போய் வந்தாலும், வேறு ஆசௌசம் உள்ள இடங்களுக்குச் சென்றாலும் ஸ்நானம் செய்த பின்னரே வீட்டிற்குள் செல்ல வேண்டும். அப்பொழுது அணிந்திருந்த வஸ்திரங்கள், ஆடைகள் முதலியனவற்றை நீரில் தோய்த்து உலர்ந்த பின்னரே மறுபடியும் பயன்படுத்தலாம். ஆசௌசத்துடன் ஆலயத்தினுள் செல்லுதல் ஆகாது. சுபகாரியங்களில் பங்கு பற்றுதல் ஆகாது. வெளியில் சென்று விட்டு வீடு திரும்பியதும் கால்களைக் கழுவிவிட்டே வீட்டிற்குள் செல்லுதல் வேண்டும். வீட்டிற்குள் செருப்பு முதலிய பாதணிகளை அணிந்து கொண்டு நடமாடுதல் கூடாது. பிறர் வீடுகளுக்குள் செல்லும் போது,

செருப்பு முதலிய பாதரட்சைகளை வெளியிலே கழற்றி விட்டு உட்செல்லல் வேண்டும். ஆலயத்தினுள்ளும், பிரகாரங்களிலும் மடங்கள், மண்டபங்கள், வழிபாட்டிடங்கள் முதலியவற்றின் உள்ளும் செருப்பு முதலிய பாதரட்சை களுடன் செல்லக் கூடாது.

ஆசௌசத்தை 31 நாட்கள், 21 நாட்கள் என்னும் அவரவர்க்கென வகுக்கப்பட்ட கால எல்லைக்கு முன்னர் எக்காரணம் கொண்டும் கழிக்க முற்படுதல் பாவகாரியமாகும். அவ்வாறு கழிக்க, புரோகிதர்கள், ஆச்சாரியர்கள் உடன்பட்டுக் கிரியைகளில் ஈடுபடல் மகாபாவம் ஆகும். உரிய காலம் முடிந்த பின்னர் ஆச்சாரியரை வீட்டிற்கு வரவழைத்து, புண்ணியா தானம் செய்வித்து, பஞ்ச கௌவியம் அருந்தி, இயன்ற தான தருமங்கள் செய்து ஆசௌசத்தை நீக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

மயிர், நகம், கரி, சாம்பர், எலும்பு, இறந்தவற்றின் எச்சங்கள், முள், கல், குப்பை கூளங்கள், கழிவுப் பொருட்கள் என்பவற்றை நீரில் போடலாகாது.

முகத்தையும் கைகால்களையும் கழுவாமல் உணவு உண்ணல் ஆகாது. படுக்கையில் இருந்து கொண்டும், இடது கையில் அன்னத்தை வைத்துக் கொண்டும், காலுக்கு மேல் கால் போட்டுக் கொண்டும், பேசிக் கொண்டும், நின்று கொண்டும், நடந்து கொண்டும் போசனம் செய்தல் கூடாது. அசுத்த இடங்களிலும், சுகாதாரமற்ற சூழலிலும், வெளியிடத்திலும், பகல் இரவு சந்திக்கும் இரண்டும் கெட்டான் வேளைகளிலும், சுத்தம் பேணாதவர் களுடன் அமர்ந்தும் உணவு உண்ணல் தவிர்க்கப்பட வேண்டும். உணவும் உண்ணும் போது கோபமும் கவலையுமின்றி, இறைசிந்தனையுடன் உணவை மதித்து, கொட்டாமல் சிந்தாமல், பக்கத்தில் இருப்பவர் மீது படாமல், முகமலர்ச்சியோடும், மனமகிழ்ச்சியோடும் ஆற அமர செவ்வை யாக இருந்து புசித்தல் வேண்டும். உண்ணும் போது பொச்சடித்தல், தும்முதல், இருமுதல், மூக்குச் சிந்துதல், எச்சில் துப்புதல், மயிரை அவிழ்த்து விடல், தலை சொறிதல், பெருமூச்சு விடல், கொட்டாவி விடுதல், உரக்கச் சப்தமிட்டு ஏவறை விடுதல், அபான வாயு பறிதல், தலை வாருதல், கைக்குட்டை துவாய் போன்றவற்றை உதறுதல் என்பன செய்யத்தகாதவை. இவற்றால் பிறர் அருவருப்புக்குள்ளாவர். சுத்தம், சுகாதாரம் கெடும். பிறர்க்கு இடையூறு விளைவிப்பதாகவும் அமையும். வயிறு புடைக்க சாப்பிடுதல் ஆகாது. வயிற்றின் அரைப்பங்கை அன்னம் முதலிய உணவினா லும், காற்பங்கை நீரினாலும் நிறைத்து மிகுதி காற்பங்கை வெறுமனே விடுதல் வேண்டும். உணவு உண்ட உடனே குளித்தல் ஆகாது. சைவநூல் களில் குறிப்பிடப்பட்டுள்ள சைவ ஆசாரங்களை வாழ்வில் அனுசரித்து நல்வாழ்வு வாழ்வோமாக.

# 18 – நந்தியெம் பெருமான்

நாம் சிவாலய தரிசனம் செய்யப்புகும்போது, கோபுர வாயிலில் உள்ள துவாரபாலகரிடம் உத்தரவு பெற்று ஆலயத்தினுள் செல்கின்றோம். அங்கு பலிபீடத்துக்கு இப்பால் வீழ்ந்து நமஸ்காரம் செய்கிறோம். நமஸ்காரம் பண்ணிய பின் உள்வீதியில் பிரதட்சிணம் பண்ணல் வேண்டும். பிரதட்சிணம் பண்ணிச் சந்நிதானத்திலே நமஸ்காரம் செய்து எழுந்து கும்பிட்டு, துவார பாலகரை வணங்கி, பின், கணநாயகராகிய திருநந்தி தேவரை வணங்கித் துதித்துப் "பகவானே, உம்முடைய திருவடிகளை அடைந்த அடியேன், உள்ளே புகுந்து சிவபெருமானைத் தரிசித்துப் பயன் பெறும் பொருட்டு அனுமதி செய்தருளும்" என்று பிரார்த்தித்துக் கொண்டு உள்ளே போக வேண்டும் என்று நாவலர் பெருமான் சிவாலய தரிசன விதியில் குறிப்பிடுகிறார்.

சிவாலயத்தில் கொடிமரம், பலிபீடம் என்பன அமைக்கப் பெற்றுள்ள இடங்களுக்கு முன்னால், சுகாசனத்தில் படுத்திருந்தவாறே மூலமூர்த்தியை இடையறாது நோக்கிய வண்ணம் இடபமாக அமர்ந்து காணப்படுபவரே நந்தியெம் பெருமான். நந்தி என்றால் மகிழ்ச்சி என்று பொருள். எப்பொழுதும் சிவசிந்தனையில் மூழ்கியிருப்பதால் மகிழ்ச்சிகரமாய் விளங்குபவர் திருநந்தி தேவர். இவர் பெரும் ஞானி. பந்தபாசமற்றவர். சிவபக்தியில் முதிர்ந்தவர். பக்குவ ஆன்மாவாக விளங்குபவர். இவரின் பக்தித் திறனும், அடிமைத் திறனும் மற்றையோருக்கு முன்மாதிரியாகத் திகழ்கின்றன.

சிவாலயங்களில் நந்தியெம் பெருமானாக அமைந்திருப்பவர், பெரும் சிவஞானச் செல்வர். அவர் திருப்பெருகு சிவஞானத்தை, சிவபெருமானிடமே, அவர் தட்சிணாமூர்த்தியாய் எழுந்தருளியபோது, நேரடியாகக் கேட்கும் பெரும் பேற்றினைப் பெற்றவர்.

தினந்தோறும் திருக்கோயிலில் நடைபெறுகின்ற எல்லாக் காலப் பூசைகளிலும் நந்திதேவருக்கும் இடமுண்டு. ஒவ்வொரு தடவையும் அபிடேகம், மலர்தூவுதல், தூபதீபம், திருவமுது படைத்தல் என்பன இவருக்கும் நிகழ்த்தப்படுகின்றன.

நந்தியெம் பெருமானுக்கு இரண்டு கொம்புகள் உண்டு. அவ்விரண்டு கொம்புகளுக்கிடையே சதாசிவமூர்த்தமாக உள்ள சிவலிங்கப் பெருமானைத் தரிசனம் செய்வதால் பெரும் பேறுகள் வாய்க்கப் பெறும்.

பிரதோஷ விரத காலங்களில் நந்தி தேவருக்கு விசேட பூசை, வழிபாடு நிகழும்.

திருக் கைலாயத்திலே வாயில் காப்பவராக நந்தி தேவர் உள்ளார். வேத்திரப் படையைத் தாங்கியவாறு அங்கு நிற்பார். தேவாதி தேவர்கள் மற்றும் முனிவர்கள் ஆகியோர் திருநந்தி தேவரை விநயத்துடன் பணிந்து அனுமதிபெற்றே சிவபெருமானைத் தரிசிக்க உட்செல்வர். யாராவது நெறிமுறை தவறினாலோ, ஒழுங்கின்றி நெரிபட்டு உள்ளே நுழைந்தாலோ அவர்கள் வேத்திரப்படையால் தண்டிக்கப்படுவர். எதிலும் ஓர் ஒழுங்கு தேவை என்பதை இது அறிவுறுத்துகிறது.

கல்லால மரநிழலில் அமர்ந்து, மோனத்தினால் ஞானத்தினை உணர்த்திய தட்சிணா மூர்த்தியிடம் நேரடியாக ஞானம் பெற்ற சிறப்புக் காரணமாகத் திருநந்தி தேவர் அகச் சந்தான குரவர்களுள் முதல்வராக மதிப்புப் பெறுகின்றார். திருக்கைலாய பரம்பரையைத் தொடர வைப்பவராக விளங்குகின்றார்.

திருநந்தி தேவரிடம் ஞானோபதேசம் பெற்றோர் பலர். இவர்கள் ஆகம வழி நின்ற சைவப் பெருந்தகைகள். "நந்தியருள் பெற்ற நாதர்கள்" என இவர்கள் சிறப்புப் பெயர் பெற்றவர்கள்.

திருமந்திரம் அருளிய திருமூலர், திருநந்தி தேவரிடம் அருள் பெற்றவர். மிக உயர்ந்த நாதாந்த முடிவை நந்திதேவரின் வழிப்படுத்தலில் அறிந்தவர். உணர்ந்தவர். நந்தி அருளாலேதான் மூலத்தை, முதலை, பரம்பொருளை – சிவத்தை நாடி, அடைய முடிந்தது எனத் திருமூலர் கூறுகின்றார். திருநந்தி தேவரின் நேரடி மாணாக்கராகத் திருமூலர் உட்பட எண்மர் இருந்தனர். சைவத் திறத்தை உலகின் சகல பாகங்களிலும் உணர்த்திய பெருமை இவர்களுக்குண்டு. சிவம் என்னும் பரம்பொருளுக்கு மேலாக வேறொரு தெய்வம் எங்கணு ம் கிடையாது என்பதை எல்லோரும் உணர வைத்தவர் திருநந்தி தேவர். சக்தியோடு இணைந்திருக்கும் சிவபரம் பொருள்தான் மெய்ப்பொருள் என்றும், அச்சிவபரம் பொருளின் அருளாலேயே உலகிலும் அண்டங்களிலும் அனைத்தும் இயங்குகின்றன என்றும் அறிவித்தவர். இந்த உண்மையைத் தமது மாணாக்கர் மூலம் உலகறியச் செய்தவர் திருநந்தி தேவர். சிவத்தின் விம்பமாக விளங்குகின்ற திருநந்தி தேவரைத் தேவர்கள் அனைவரும் சிவபரம் பொருளாகவே கருதி வழிபாடு செய்கின்றார்கள். சிவாகம சொரூபமாக விளங்கும் நந்தியெம் பெருமானே சைவத்தின் தலைமகன் ஆவர். சைவம் சிவசம்பந்தம். சிவம் அன்பு சம்பந்தம். அன்பே சிவம்.

"பரனாய், பராபரம் காட்டி உலகில்,
அரனாய்ச் சிவதன்மம் தானே சொல்காலத்து
அரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரன் ஆகி ஆகமம் ஓங்கி நின்றானே" – என்பது திருமூலர் திருமந்திரம்

# 19 – நீதியை விசாரிப்பவனே சைவசமயி

சைவம் வளர்த்த சான்றோராகப் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை போற்றப்படுகிறார். அவர் சைவசமயம் பற்றிக் கூறிய கருத்துக்கள் சிலவற்றை ஈண்டு நோக்குவோம்.

"நினைப்பு, மறப்பு, விழிப்பு, நித்திரை, பிறப்பு, இறப்பு முதலிய காரியங்கள் நமது வல்லமையைக் கடந்து நடக்கின்றன."

இந்நிகழ்வுகளை நாம் விரும்பியபடி, விரும்பியபோது நிகழச் செய்யும் ஆற்றல் மனிதர்களாகிய எம்மிடம் இல்லை.

அப்படியானால், "அக் காரியங்களை நடத்தி வைக்கும் அதி உயர் பொருள் எது?" என்னும் வினா எழுகிறது. அந்த அதிசக்தி வாய்ந்த பொருள், நமது வல்லமையைக் கடந்து நிற்கின்ற பொருள் ஆகும். அதைக் கடவுள் என்கிறோம்.

"கடவுளுக்கு வடிவம் உண்டா?" கடவுள் வடிவம் உள்ள பொருள்தான். அந்த வடிவத்தை நமது ஊனக்கண்களால் காணமுடியாது. சுத்த அறிவினால் காணத்தக்கது. அதற்கு "நீதி" என்று பெயர். வடிவம் மட்டுமல்ல பெயரும் உண்டு அப்பொருளுக்கு.

நீதி வெகு ஆழமானது. மிகமிக நீளமானது. "பங்கயத் தயனு மாலறியா நீதி" என்பது மணிவாசகம். நீதியின் ஆழத்தையும் நீளத்தையும்; நீதியை அடியிலிருந்து முடிவரை, கண்டு கொள்ளக் கூடிய அறிவுடையோர் எவரும் இல்லை. பிரமவிஷ்ணுக்களுக்குக் கூட, அந்த அளவுக்குச் சுத்த அறிவு உண்டாகவில்லை. நீதியின் அடியையோ முடியையோ, அவர்களால் தேடிக் கண்டு பிடிக்க முடியவில்லை. பிரமவிஷ்ணுக்களிடம் வேரூன்றிவிட்ட அகங்காரம் தான் அறிவுக்குத் திரைபோட்டு நீதியை அறியவொட்டாது தடுத்தது.

நீதியை அறியவிடாது மறைக்குங் குற்றங்கள் இரண்டு. ஒன்று அறியாமை. மற்றது வஞ்சகம்.

"அறியாமை பாவமன்று. முயற்சிக்குப் பயன் தராது. அதனால் குற்றம் எனப்படுகிறது."

"வஞ்சகம் படுகுற்றம். மகா குற்றம். நரகத்துக்கு வித்து. அறிவுமுனையை அழித்து, அந்தகாரம் செய்து கொண்டிருப்பது" வஞ்சகம் நஞ்சு. அந்த நஞ்சை வைத்திருப்பவர்கள் தமக்குத் தாமே அழிவைத் தேடிக் கொள்கின்றனர்.

தெருவழியே சென்று கொண்டிருக்கிறோம். வழியில் பளிச்சென்று ஒரு பொருள் தெரிகிறது. உடனே குனிந்து எடுக்கிறோம். நன்றாகப் பார்க்கிறோம். அந்தப் பொருளுக்குரியவர் இன்னார் என்றும் தெரிகிறது. சந்தேகம் இருந்தாலும் அப்பொருளுக்குரியவர் யார் என்பதை விசாரித்து நிச்சயஞ் செய்யப் போதிய வழி துறைகளும் இருக்கின்றன.

கண்டெடுத்த பொருளை அதன் சொந்தக்காரரிடம் ஒப்படைப்பதே நீதி என்று அறிவு சொல்கிறது. வஞ்சகம் அந்த அருமையான அறிவை ஏதோ விதத்தில் மழுக்கி மாயஞ் செய்துவிடுகிறது.

நாமும் ஒரு கணம் ஊசலாடுகிறோம். நீதியின் பக்கம் சாய்வதா, வஞ்சகத்திற்குத் துணைபோவதா? நீதியின் பக்கம் செல்வது என்றால் கடினம்தான். வஞ்சகம், கள்ளமானது, கபடம் நிறைந்தது. வசியம் பண்ணத்தான் பார்க்கும்.

இந்தக் கள்ள வஞ்சகம் தான் நமது பரம சத்துரு. அண்டிக் கெடுப்பது. ஒரு கணத்தில் வஞ்சகம் எமது மனத்தைத் தன் வசப்படுத்தி விடும். அதனால், அதனோடு சதா போர் தொடுத்துக் கொண்டே நாம் சர்வ சாவதானமாக இருக்க வேண்டும். அறிவை நாம் அடகு வைத்துவிடக் கூடாது. நமது அறிவினால், மனதை வஞ்சகத்தின் சிறையிலிருந்து மீட்டு விடவேண்டும். நீதி எது? எது? என்று அடிக்கடி விசாரணை செய்தல்தான், வஞ்சகத்தைத் தேய்க்கும்படை. அந்தப் படையினால் எம்மிடமுள்ள ஆசையை, அவாவை இச்சையை எதிர்கொண்டு வென்றால் அறியாமை நீங்கும். அறியாமை நீங்கச் சுத்த அறிவு வெளிப்பாடாகும்.

"அந்தச் சூரிய உதயத்திலே, நீதியின் பிழம்பு ஒரு சாயலாகத் தோன்றத் தொடங்கும். அறிவுச் சூரியன் மேல் எழ, எழ நீதியின் உண்மைத்தே தாற்றம் - கை,கால் முதலிய அவயவங்கள் காட்சியளிக்கும். அடி முடி தோன்றும்."

"நீதியை விசாரிப்பதிலே விசாரித்து, அந்த நீதியிலே எவ்வித வஞ்சகத் தடையுமின்றி, நிலை நிற்பதிலே - எவனுக்குச் சதா பரிசுத்த விருப்பம் உண்டோ, அவன் சமயி" - என்கிறார் பண்டிதமணி.

"அந்த விருப்பத்தை நூறாயிரம் கள்ளக் காரணங்கள் கற்பித்து எவன் வஞ்சிக்கின்றானோ, அவன் சமயி அல்லாதவன்."

நீதியை நிலைநாட்டுவதற்குத்தான் நியாயம் உதவ வேண்டும். நீதியை மழுங்கச் செய்வதற்கு நியாயம் கண்டு பிடிக்கும் இக்காலத்தில், சமயியைக் காண்பது மிக அரிதுதான்.

நீதியை விசாரித்து அதன் பக்கம் நிற்பவன் சமயி.

"நீதிதான் கடவுளின் வடிவம்". கடவுளை விசாரித்து வஞ்சகமின்றி விரும்புவது சமயம் ஆகும்.

நீதிதான் சிவம். சிவம் என்றால் நன்மை, மங்களம், நீதி, அன்பு என்று பொருள்.

"எவன் நீதியோடு சம்பந்தப்படுகிறானோ, அவன் சிவத்தோடு சம்பந்தப்படுகிறான்."

"சிவத்தோடு சம்பந்தப்படுகிறவனுக்குத் தான் சைவம் என்று பெயர்."

"சிவத்தோடு - நீதியோடு - அன்போடு சம்பந்தப்பட்ட சமயம் சைவசமயம்" என்பதை உணர்வோமாக.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்."

# 20 - வாழ்க்கையில் சைவம்

சைவமக்கள் ஆசாரங்களையும் அனுட்டானங்களையும் மேற்கொண்டு வருபவர்கள். விஞ்ஞான அறிவுக்கு எட்டாத சில ஆசாரங்களை மூட நம்பிக்கைகள் என்று தற்காலத்தில் அவற்றைத் தள்ளி வைத்தும் வருகிறார் கள். விஞ்ஞான அறிவு பூரணமான அறிவாகக் கொள்ளப்படுவதில்லை. அன்றியும் ஒரு காலத்தில் விஞ்ஞானம் சரியென்று ஏற்றுக்கொண்டதைப் பின்னர் வேறொரு காலத்தில் அதே விஞ்ஞானம் பிழையென்று நிராகரித்தும் விடுவது உண்டு. இந்த வகையில் விஞ்ஞானத்தினால் விளக்கம் தரமுடியவில்லை என்ற ஒரு காரணத்தினால், காலம் காலமாக மக்கள் பின்பற்றி அவற்றால் நன்மைகளைப் பெற்று வந்த நிலையில் சைவ ஆசாரங்கள், பண்பாடுகள் யாவற்றையுமே மூட நம்பிக்கைகள் என்று தள்ளி வைப்பது நியாயமாகத் தோன்றவில்லை. அவ்வாறு செய்வது, நமது கலாசாரத்தைப் புறக்கணிக்கும் முயற்சியாகவே வந்து விடும். நன்மையும் உண்மையும் இல்லாத கலாசாரம் நின்று நிலைக்காது. எமது சைவக் கலாசாரம் இற்றைவரை நிலைத்து நிற்கின்றதென்றால், அது நமக்குத் தருகின்ற நன்மையும், அதன் உண்மையும் தான் காரணம். வேற்றுக் கலாசார மோகத்தினால் உந்தப்பட்டவர்களும் உண்மை தெளிந்தபின் சைவ ஆசாரத்தையும், கலாசாரத்தையும் பேண முன்வருவர் என்பது உறுதி.

சைவ ஆசாரங்கள் சிலவற்றை நோக்குவோம். சூரியன் உதிப்பதற்கு இரண்டு மணித்தியாலங்களுக்கு முன் நித்திரையை விட்டு எழுந்து காலைக் கடன்களை முடித்து, குளித்து, தெய்வ சிந்தனையில் ஈடுபட்டும் கடவுளை வணங்கியும் தம் அன்றாடம் கருமங்களைத் தொடங்க வேண்டும்.

தாய் தந்தையர்களை வணங்கி அவர்களைப் பேணிவருதல் அவசியம். மூத்தோர், பெரியோர்களை மதித்தலும், மரியாதை செய்தலும் மேலான கடமைகள்.

தாயை இழந்தவர்கள் மாதந்தோறும் பூரணை விரதத்தையும், தந்தையை இழந்தவர்கள் அவ்வாறே அமாவாசை விரதத்தையும் மேற்கொள்ளுதல் வேண்டும். இவற்றுடன் சிராத்தம், மஹாளயம் என்பவற்றை உரிய திதிகளில் ஆண்டுதோறும் செய்துவருதல் அவர்களின் ஆத்ம சாந்திக்கு வழிவகுக்கும். பிதுர்களுக்குப் பிரீதி உண்டாக்கும் சிராத்தம், பிண்டதானம், தர்ப்பணம் என்பவற்றை நிறைவேற்றுவதன் மூலம் நமது முன்னோர்களின் ஆசீர்வாதங்கள் நமக்குக் கிடைக்கும். நமக்கு வருகின்ற ஆபத்துக்கள், விபத்துக்கள், அவமிருத்துக்களிலிருந்து பிதுர்கள் தான் எம்மைக் காப்பாற்றுகின்றன. பிதுர்களின் ஆசீர்வாதங்கள் நம்முடைய வாழ்விற்குப் பலமாக அமைகின்றன. தென்புலத்தார் என்றும் இவர்களைக்

குறிப்பிடுவர். வீட்டில் விடிவு ஏற்படுவதற்கு, குடும்பம் குதூகலிப்பதற்கு பிதுர்களின் ஆசிகள் நமக்குத் தேவை.

உணவு உண்பதற்கு முன் ஒவ்வொரு தடவையும் கடவுளை நினைந்து, உணவை வழங்கியமைக்கு ஆக நன்றி கூறி அதன் பின் உண்ண வேண்டும். உண்ணு ம் உணவில் ஒரு பகுதியைப் பசித்து வருபவர்களுக்கு வழங்குதல் தர்மமாகும். தினமும் உலையில் அரிசியைப் போடுவதற்கு முன், ஒரு பிடி அரிசியை எடுத்து ஒரு பாத்திரத்தில் போட்டு வைத்து, மாதம் ஒரு முறையாதல் சேர்ந்த அரிசியை அன்னமாக்கி ஏழைகள், ஊனமுற்றோர் ஆகியோருக்கு அமுதளித்தல் சைவமரபு ஆகும். உணவினை வீணாக்குதல், விரயமாக்குதல், கொட்டுதல், சிந்துதல் என்பன பாவச் செயல்கள். இறைவன் உணவுப் பொருட்களை எமக்குத் தந்தமை வீணாக்குவதற்கோ, பதுக்கி வைப்பதற்கோ அன்று, பலருடனும் பகிர்ந்து உண்பதற்கே என்பதை நாம் உணர்ந்து கொள்ளுதல் அவசியம்.

எம்மை நாம், சொகுசு வாழ்க்கைக்கும், சோம்பலுக்கும், ஊதாரித் தனத்திற்கும் பழக்கப்படுத்தி விடுவோமானால், இறைவன் துணைக்கு வரமாட்டான். பகலில் நித்திரை செய்தல், நெட்டி முறித்தல், கொட்டாவி விடுதல், பெருமூச்செறிதல் என்பன சோம்பலுக்கு அடையாளம். இவற்றைத் தவிர்த்தல் நன்மையைத் தரும்.

வயலில் உள்ள நெற்பயிர்களுக்கு, அங்கு முளைத்து வளருகின்ற களைகள் நாசத்தை விளைவிக்கின்றன. அவ்வாறே மனிதர்களுக்குக் காம இச்சை அழிவை ஏற்படுத்துகிறது. இதைப் பலர் உணர்வதில்லை. காமனைக் கொன்றவன் எங்கள் சிவன். அந்த நிலையில், காம இச்சையை வளர்ப்பது என்பது சிவத்துரோகம். காமத்தை விலக்குவது நற்செயல்.

மனிதர்கள் தங்களால் இயன்ற அளவிற்கு மற்றவர்கள் மேல் கரிசனை கொண்டு உபகாரம் செய்பவர்களாக விளங்க வேண்டும். சிரமதானம் மூலம் பல கைங்கரியங்களைச் செய்யலாம். திருக்கோயில்களில் தொண்டுகள் செய்யலாம். நலிந்தோர்களுக்கு சரீர உதவி புரியலாம். எல்லாவற்றிற்கும் பணம் தேவையே என்று அங்கலாய்க்கத் தேவையில்லை. துன்பப்படுபவர் களைக் கண்டு இரங்கி, நாலு வார்த்தைகள் நயமாகப் பேசி, ஆறுதல் தரலாம். எல்லாவற்றிலும் வித்தியாதானம் சிறந்தது. நல்லொழுக்கத்தையும், நற்பண்புகளையும் வளர்ப்பது கல்வி. மனிதர்கள் அறநெறி தழம்பாமல், வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் எல்லா முயற்சிகளும் தர்மங்கள் ஆகும். சைவப் பணி என்பது எல்லோரையும் வாழ்வித்தல். யாவரையும் இன்பத்தை அடையச் செய்தல். அத்தகைய சைவப்பணிகளை மேற்கொள்வதையே பணியாகவும், ஆசாரமாகவும் கொண்டு நல்வாழ்வு வாழ்வோமாக.

# 21 - கற்றாங்கொழுகு

சமயத்தினுடைய வலு, சமூகத்திலுள்ளவர்கள் சமயப் பண்புகளையும், சமய நெறி முறைகளையும் பேணி வருவதில் தான் தங்கியுள்ளது. அப்பொழுதுதான் அது வாழும் சமயம் ஆக விளங்கும். எமது சமயம் சைவ சமயம். அது கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து முன்தோன்றிய மூத்த குடிகளின் சமயம் என்று அதன் தொன்மைச் சிறப்பினை எடுத்துக் காட்டிப் பெருமைப்படுகிறோம். பெருமைப்பட வேண்டியதுதான். தொன்மைச் சிறப்பைப் பேசிக் கொண்டிருப்பதால் மட்டும், சைவசமயத்திற்குப் பெருமை சேர்த்து விட முடியாது. சைவநெறியில் நாம் நின்று ஒழுகும் போதுதான், சைவத்திற் கும் சிறப்பு, நமக்கும் பெருமை கிடைக்கிறது. அப்பொழுதுதான், சைவம் வாழும் சமயமாகவும் விளங்கும். சமயம் ஏட்டிலும், எழுத்திலும், பேச்சிலும் தான் தற்காலத்தில் வாழ்கின்றது. மக்களின் வாழ்க்கையில், எந்த அளவிற்கு சைவம், தற்காலத்தில் வாழ்கின்றது என்பது கேள்விக் குறியாகவே உள்ளது.

சைவசமய நூல்களைக் கற்று அறிவு பெறுவதினால் மட்டுமோ, சைவ மகாநாடுகள் கூட்டப் பெற்றுத் தீர்மானங்கள் நிறைவேற்றப்படுவதாலோ, ஆய்வுகள், கருத்தரங்குகள் நடத்தப்படுவதாலோ, சைவத்தை வளர்க்கிறோம் என்பதாகி விடாது. இவ்வாறு சொல்வதால் அவை தேவையில்லை என்ற முடிவிற்கு வந்து விடக்கூடாது. அவையும் தேவையே என்பதை ஏற்றுக் கொள்ளும் அதேவேளை சைவத்தின் முழுமையான வளர்ச்சியும், வலுவும் சைவ நெறிநின்று சைவமக்கள் வாழும் வகையிலேயே தங்கியுள்ளன என்பதை நாம் ஒவ்வொருவரும் உணர்ந்துகொள்ள வேண்டும்.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்கிறது தமிழ் மறை. சந்தேக விபரீதம், கருத்து மயக்கம், முரண்பாடு கள் இன்றிக் கற்றுத் தெளிந்தபின்னர், கற்றபடி ஒழுக வேண்டும் என்கிறது திருக்குறள் என்னும் நீதிநூல்.

"கற்றாங்கு ஒழுகு" என்பது ஆன்றோர் வாக்கு. இன்று நம்மில் பெரும்பாலோர் கற்றவர்கள், படித்தவர்கள்தான். உயர்கல்வி கற்றுப் பட்டங்கள், சான்றிதழ்கள் என்பவற்றைச் சேர்த்து வைத்துக் கொள்கிறோம். ஆயினும் நாம் கற்றபடி, தர்மவழியில், நீதி நெறியில் வாழ்கின்றோமா, என்பது பற்றி நாம் ஒரு கணம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

நம் வாழ்க்கையில் ஒரு கணமன்று, அடிக்கடி சிந்தித்துப் பார்க்க

வேண்டிய விஷயம் இதுவாகும். அப்பொழுது நாம் தவறுகள் செய்திருந்தால் கூட, மீண்டும் மீண்டும் அதே தவறுகளைச் செய்யாமல் தவிர்க்கலாம்தானே.

இன்று நம்மில் பலர், தவறுகளைத் தவறுகள் எனத் தெரிந்து கொண்டுதான், செய்து வருகிறோம். பொய் பேசக் கூடாது என்று தெரியும். புறங்கூறக் கூடாது என்பதும் தெரியும். பிற உயிர்களை வருத்தக் கூடாது என்பது நன்றாகத் தெரியும். புகைத்தல் ஆகாது. மது அருந்துதல் கூடாது என்பவையெல்லாம் நாம் கற்றுத் தெளிந்த பாடங்கள். ஆனால் இவற்றை நாம் முற்றிலாக விலக்கி விட்டோமா? இல்லையே. இந்த மனிதர்களின் நடத்தைப் பாங்குகளை அவதானித்துப் பார்க்கும் போது பல விசித்திரப் போக்குகளையும், விநோதங்களையும் காண முடிகிறது.

இத்தகைய தவறுகளையும், தீயவற்றையும் பிறர் அறியாதவாறு ஒழித்து மறைத்துச் செய்கிறார்கள். பின் பலர் அறிய வந்ததும், பகிரங்கமாகச் செய்கிறார்கள். கேட்டால், பழகிவிட்டோம், விட்டு விலக முடியாமலிரு க்கிறதே என்கிறார்கள்.

சமயத்திற்கு முரணாக நடந்து கொள்கிறீர்களே என்றால், எங்களுக்குச் சமயத்தில் நம்பிக்கை இல்லை என்பார்கள். இவை சமூக விரோதச் செயல்கள் என்றால், யார் தவறுகள் செய்யாமல் இருக்கிறார்கள். எல்லோரும் தானே செய்கிறார்கள். நான்மட்டும் என்ன விதிவிலக்கா? தவறு செய்வது மனித இயல்பு. மன்னிப்பது கடவுள் இயல்பு என்று தம் குற்றங்களை நியாயப்படுத்துவதில் பலர் மேதைகளாகக் காணப்படுகின்றனர். இவ்வாறு தருணத்திற்குத் தகுந்தபடி பேசுவதிலும், நடந்து கொள்வதிலும், மறைந்து ஒழுகுவதிலும், மனிதர்கள் அபார திறன்களைக்காட்டி, வருகிறார் கள். குற்றங்களையும் இழைத்துக் கொண்டு, மன்னிப்பையும் எதிர்பார்க்கும் மனிதர் கூட்டம் பெருகி வருகின்றது. இந்த நிலை நீடிக்கக் கூடாது. அதற்கு யாது செய்ய வேண்டும் என்பதை நாம் ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்க, இப்பொழுதே தொடங்க வேண்டும். தவறுகள் செய்வது தவறு என்பதை அறிந்தால் மட்டும் போதாது. உணர்ந்து கொள்ளவும் வேண்டும். தவறு களைச் செய்துவிட்டு, நியாயப்படுத்த முயற்சிக்கக் கூடாது. மன்னிப்பையும் திருமபத் திரும்ப எதிர்பார்த்தல் ஆகாது. ஒவ்வொருவரும் தம்மைத்தாமே திருத்திக் கொண்டால் சமூகம் திருந்திவிடும். தன்னை உணர்தல், தன்னிறைவு பெறல் என்று சைவநெறி இதைத்தான் குறிப்பிடுகிறது.

“மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம் ”

# 22 - சுதந்திரம் - சைவநோக்கு

சுதந்திரம், மனித வாழ்வின் உயர் இலட்சியம் ஆகும். அதனை அடைதலே வாழ்வின் குறிக்கோள் என்பதை எல்லோரும் ஏற்பர். நமது வாழ்வின் உயிர்ப்புக்கும், உன்னதத்திற்கும், மற்றும் சகல முன்னேற்றங்களுக்கும் ஆதாரமாகவும், அனுசரணையாகவும், அவற்றைப் போஷிப்பதாகவும் விளங்குவது சுதந்திரம். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய மூன்றும் மனுக்குலத்தின் ஜீவநாடிகள். அவற்றை ஓம்புதல், நீதி என்கிறது சைவநெறி. உலகியலுக்கு மட்டும் அல்ல. ஆன்மிகத்திற்கும் அதன் வளர்ச்சிக்கும் இம் மூன்றும் முக்கியமானவை என்று நமது சமயம் கூறுகிறது. "யாதும் ஊரே, யாவரும் கேளிர்", "உலகை ஒன்றாகக் காண்பதே கல்வி" என்ற நம் முன்னோரின் நயத்தக்க நாகரிக வெளிப்பாடுகள் உலகியல் நாகரிக முதிர்ச்சியை மட்டுமல்ல. அவர்களின் ஆன்மிகப் பண்பாட்டு வளர்ச்சியையும் குறிப்பனவாக விளங்குகின்றன. சைவம் காட்டும் ஆன்மிக ஒருமைப்பாட்டுத் தத்துவம், உலக சுதந்திரத்திற்கும், சமத்துவத்திற்கும், சகோதரத்துவத்திற்கும் வழிவகுக்கின்றது.

எல்லா உயிர்களிடத்திலும் ஒரே ஆன்மாதான் நீக்கமற நிறைந்திருக்கிறது என்று கொள்வது ஆன்மிக ஒருமைப்பாடு என்னும் உயரிய தத்துவம். இதனை உணர்ந்து கொள்ளும் போதுதான் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்பன வாழும் தன்மையுடையனவாகத் திகழ்கின்றன. ஆன்மிகத்தைப் புறக்கணித்துவிட்டுச் சுதந்திரம், சமத்துவம் பற்றிப் பேசுவது, வெறும் பேச்சாக அமையுமே தவிர, நடைமுறை ஒழுக்கமாக அமைந்து விடாது. மற்றையோரின் சுதந்திரத்தையும் நாம் மதிக்க வேண்டும் என்ற உணர்வு எப்பொழுது நம்மில் உதயமாகும் என்றால், ஆன்மிக நிலையில் நின்று சிந்திக்கும் போதுதான் என்பதை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். எம்முடைய சுதந்திரத்தை எம்மிடம் வைத்துப் பேணிக் கொள்வதற்கும் எமக்கு இன்றியமையாததாகத் தேவைப்படுவது ஆன்மிக பலம் தான். அழுக்காறு, அவா, வெகுளி. மற்றும் தீய எண்ணங்களிலிருந்து விடுதலை பெறும் போது, எமது ஆன்மிக பலம் அதிகரிக்கிறது.

"நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம், நடலையில்லோம்
ஏமாப்போம், பிணியறியோம், பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளும் துன்மில்லை......"

இத்தகைய துணிச்சல் மிக்க சுதந்திர முழக்கம் செய்வதற்கு

நாவுக்கரசர் எங்கிருந்து தைரியத்தைப் பெற்றார்? ஆம். நாவுக்கரசர் வளர்த்துக் கொண்ட ஆன்மிக பலம்தான் அவருக்கு உறுதியையும் உரத்தையும் தந்தது. ஆன்மிகம் ஒருவரின் சுதந்திரத்தைப் பாதுகாத்துத்தரும் அளவிற்கு வேறு எந்தப் பாதுகாப்புச் சாதனமும் உதவப் போவதில்லை என்பது சைவம் காட்டும் உண்மை.

ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள், அந்நிய ஏகாதிபத்தியங்களின் ஆட்சிக்குள் அடிமைப்பட்டுச், சுதந்திரம் இழந்த நிலையில், அடக்கு முறைகளுக்கு உட்படுத்தப்பட்டு இருந்த எமது தாய்த் திருநாடாம் இலங்கை நாட்டில் பத்தொன்பதாம் நூற்றாண்டில், சூரியனே, அஸ்தமிக்காத சாம்ராஜ்யம் என அன்று புகழப்பட்ட ஆங்கிலேய சாம்ராஜயத்திற்கு எதிராகக் கிளர்ந்து எழுந்து, சுதந்திர வீரமுழக்கம் செய்தவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள். அத்தகைய வீரத்தையும் அஞ்சாமையையும் நாவலர் பெருமானுக்கு அளித்தது அவரிடமிருந்த ஆன்மிக பலமேயாகும். தனியொரு மனித இயக்கமாகச் செயற்பட்ட நாவலர், எமது சமய, மொழி, பண்பாட்டு விடுதலைக்காக அல்லும் பகலும் அனவரதமும் போராடிய மாவீரர். எம்மக்களிடையே தேசிய உணர்வையும், சுதந்திரதாகத்தையும், நாட்டுப் பற்றையும், மொழி, சமய, பண்பாட்டு, கலாசார விடுதலையில் பேரார்வத்தையும் ஏற்படுத்திய எம் நாட்டு முன்னோடிகளுள் முதல் இடம் பெறுபவர் ஆறுமுகநாவலர் அவர்களே.

ஒரு நாடு அரசியல் விடுதலை பெறுவதற்கு முன்னர், சமய, ஆன்மிக, சமூக, மொழி, கலாசார உணர்வு விடுதலை பெறுதல் மிக அவசியம் எனச் சிந்தித்துச் செயல்பட்டவர் நாவலர் பெருமான். அவையெல்லாம் அழிந்த பின்னர், நமது அடையாளங்கள் மறைந்த பின்னர், பெற்றுக் கொள்ளப்படும். அரசியல் சுதந்திரம் பயனற்றதாகிவிடும் என்று தீர்க்கதரிசனத்தோடு அன்றே மொழிந்தவர் நாவலர். சைவ வித்தியாலயங்களை நிறுவி, சைவத்தையும், தமிழையும், சைவத் தமிழ்ப் பண்பாட்டையும் கல்வி மூலம் மறுமலர்ச்சி பெறச் செய்யும் நடவடிக்கைகளில் நாவலர் ஈடுபட்டமை குறிப்பிடத்தக்கது.

நாவலர் நீதிமான். சிறந்த சமயி. ஆன்மிக வழியிலே வாழ்ந்து காட்டிய பெருந்தகை. அவருக்கு நிதி பெரிதல்ல. நீதியே பெரிது. நீதியைக் குறுக்கி, நிதி செய்யுங் கலையைத் தெரிந்து கொள்ளாதவர். "செம்மை நலமறியாத சிதடர்;" "எற்றிற்குரியர் கயவர்;" "முத்தி நெறியறியாத மூர்க்கர்;" என்பாரோடு இணங்கி உறவாடாது, அவர்களை விட்டு விலகியிருப்பவர். இத்தகையவர்கள் நம் மக்களின் விடுதலையை விரும்பாதவர்கள். முத்தி என்றால் விடுதலை என்று பொருள்படும். இம்மை விடுதலை மறுமை

விடுதலை என்ற இரண்டிற்கும் எமக்கு வழிகாட்டியாக விளங்கியவர் நாவலர் பெருமான். இந்த விடுதலைக்கு எதிரானவர்கள் அந்நியர் ஆகவும் இருந்தனர். நம்மவர் ஆகவும் இருந்தனர். அவர்கள் எல்லோருக்கும் எதிராகப் போர்க்கொடி உயர்த்தினார். அவருடைய நீதி அங்குதான் வெளிப்பட்டது. நீதியில் நிமிர்ந்தோரை உயர்ந்தோர் என்றார். நீதியில் சரிந்தோரைத் தாழ்ந்தோர் என்றார். இது சாதிப் பாகுபாடு அன்று. நீதியின் அடிப்படையிலான பாகுபாடு: எல்லோருமே நீதிவழுவா நெறியில் வாழ்ந்து உயர்ந்தோர் வரிசையில் இடம் பிடிக்க முடியும் என்பது நாவலர் நிலைப்பாடு. நாவலர் கடைப்பிடித்த நீதி, மேன்மை கொள் சைவநீதியாகும். அதுவே உலக நீதியுமாம்.

ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் இருக்க வேண்டியது நீதி. பிறர் சுதந்திரத்தை மதிக்க வேண்டியது நீதி. ஒருவரின் சுதந்திரத்தை மறுப்பது அவரை வாழவிடாமல் தடுப்பது ஆகும். எனவே அது அநீதி. ஓருவர் தனது சுதந்திரத்தைத் துர்ப்பிரயோகஞ் செய்வதால், பிறருக்கு இடையூறுகள் ஏற்படுகின்றன. எனவே அது அநீதி.

“மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்”

# 23 - மனிதர், தேவர், நரகர்

சமயம் என்பது வாழ்க்கை நெறி. நமது வாழ்க்கையைச் செம்மைப் படுத்த உதவுவது சமயம். அந்த வகையில் சமயத்தை வேண்டாமென்று மறுப்பவர்கள். நல்வாழ்வை வாழ மறுப்பவர்கள் ஆகின்றனர். சனாதன தர்மம், எங்கள் சமயம், நல்வாழ்விற்குத் தர்மத்தைக் கடைப்பிடிப்பது அவசியமாகின்றது. உலகில் தர்மம் ஓங்கியிருந்தால், மக்களிடையே சாந்தம், அமைதி, மகிழ்ச்சி, இன்பம் யாவும் காணப்படும். அதர்மம் தலைதூக்கினால், நல்லவை யாவும் அகற்றப்பட்டு, மக்களிடையே குழப்பங்கள், துன்பங்கள், அல்லல்கள், தொல்லைகள் யாவும் மேலோங்கிக் காணப்படும்.

மனிதர்களாகிய நாம் இன்பத்தை விரும்புவதும், துன்பத்தை வெறுப்பதும் இயல்பு. அதனால் எம் விருப்பம் நிறைவேறுவதற்கு தர்மத்தை வாழ்வில் கடைப்பிடிப்பதுதான் ஒரே வழி. உத்தமமான வழி. சமயம் காட்டும் நல்வழியும் அதுவேயாகும்.

பிரஜாபதி என்பாருக்கு மூன்று பிள்ளைகள் இருந்தார்கள். தேவர், மனிதர், அசுரர் எனத் தம்பிள்ளைகளுக்குப் பெயரிட்டிருந்தார். மூவரும் உரிய காலத்தில் கல்வி கற்றனர். கல்வியைத் தந்தையிடமே கற்றனர்.

கல்வியைக் கற்று முடிந்ததும், தந்தையாகிய குருவிடம் தமக்குத் தீட்சை வழங்கும்படி பிள்ளைகள் கேட்டுக்கொண்டனர்.

முதலில் பிரஜாபதி, தேவர் என்ற நாமத்தையுடைய மகனை அழைத்தார். அவருக்குத் “த” என்ற ஓர் எழுத்தை மந்திரமாக அளித்தார். அவ்வாறு அளித்து விட்டு, “த” என்ற ஓரெழுத்து மந்திரத்தின் பொருள் “புரிந்ததா” என்று கேட்டார். அதற்கு, தேவர் “நன்றாக விளங்குகிறது. “த” என்ற எழுத்து “தமனம்” என்பதில் வருகின்ற முதலெழுத்து. எம்மைத் தமனம் செய்யும்படி உபேதசித்துள்ளீர்கள். அதனால் பொறிகள், புலன்களை அடக்குமாறு கூறுகிறீர்கள்” என்றார் தேவர்.

தேவர்கள் பின்னர் சிற்றின்பப் பிரியர்களாகி விடுவர் என்பதை முன்கூட்டியே அறிந்துதான், பிரஜாபதி, தமனம் செய்யுமாறு கூறியுள்ளார்.

பஞ்சப் புலன் ஐந்தும் வஞ்சனையையே செய்யும் என்கிறார் மாணிக்க வாசகப் பெருமான். புலன்களை நாம் ஆட்சி செலுத்த வேண்டுமே தவிர, புலன்கள் எங்களை மேலாண்மை செய்ய அனுமதித்தல் கூடாது. தேவர்களின் தலைவனாகிய இந்திரனும் புலன் வழிச் சென்றமையினால்

பல்வேறு சந்தர்ப்பங்களில் துன்பங்களுக்குள்ளானான் எனப் புராணங்கள் கூறுகின்றன. இந்திரன் கெட்டதும் சந்திரன் கெட்டதும் மற்றைய தேவர்கள் கெட்டதும் அவர்கள் தம் பொறிகளை அடக்க முடியாமையினாலேயே யாகும். எனவேதான் இதனை முன்னதாக உணர்ந்து கொண்ட பிரஜாபதி, தன் மகன் தேவருக்கு "த" உபதேசம் செய்து, தமனம் செய்ய வேண்டு மென்று கோரினார்.

மனிதர் என்னும் நாமம் கொண்ட மகன், பிரஜாபதியிடம் தமக்குத் தீட்சையளிக்கும்படி கேட்டபொழுது, அவருக்கும் "த" என்ற எழுத்தையே அளித்தார். இப்பொழுது "த" என்ற எழுத்து, தானம் என்பதைக் குறிப்பதாக அமைந்தது. மனிதர் இதனைப் புரிந்து கொண்டார். மனிதர் என்ற தனது மகனே மனித இனத்தின் மூலகர்த்தா ஆவர். அவரின் பின் தோன்றல் களாகிய மனிதர்கள், லோபிகளாகவும், பண ஆசை பிடித்தவர்களாகவும் வருவர் என்பதை அறிந்து கொண்டவர் பிரஜாபதி. அதனாலேயே மனிதரைத் தானம் செய்யும்படி உபதேசித்தார்.

அடுத்து அசுரர் என்ற நாமத்தைக் கொண்டவன் தனக்கும் தீட்சையளிக்கும்படி தந்தையை வேண்டினான். பிரஜாபதி "த" என்ற எழுத்தையே அசுரருக்கும் அளித்தார். இம்முறை "த" என்னும் எழுத்து தயை என்பதைக் குறிப்பதாக அமைந்தது. அசுரர் இதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டார். அசுரர் என்பானின் பின்தோன்றல்களான அசுரர்கள் கொடுமைகளை இழைப்பதில் நாட்டமுடையோராக இருப்பர் என்பதைப் பிரஜாபதி அறிந்திருந்தமையினால், அசுரர்கள் தயை, கருணை உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்று உபேதசித்தார். தமனம், தானம், தயை என்ற மூன்றையும் தனது தேவர் மனிதர், அசுரர் என்ற மூன்று பிள்ளைகளுக்கும் பிரஜாபதி தீட்சையாக அளித்தார். அதன் மூலம் பேருண்மையை வெளிப்படுத்தினார். தேவர் இயல்பு, இந்திரியங்கள் வழிச் செல்லல். அதனால் இந்திரியங்களை அடக்க வேண்டும். மனிதர் இயல்பு பணம், பொருள் என்பவற்றில் மிதமிஞ்சிய ஆசை கொள்ளல். அதனால் மனிதர் ஆசைகளை அடக்க வேண்டும். அதற்குத் தானம் செய்தல் வேண்டும். அசுரர் இயல்பு கொடுமை புரிதல். அதனால் அவர்கள் தயை, கருணை காட்ட வேண்டும்.

இங்கு தேவர், மனிதர், அசுரர் என்ற முத்திறத்தினரும் நாங்கள்தான் என்பதை உணர்ந்து கொள்ளல் வேண்டும். எம்மிடம் புலன்வழிச் செல்லல், பணத்தின் மீது ஆசை கொள்ளல், பிறருக்குத் தீமை செய்தல் என்பன இருக்கின்றன. இவற்றை நீக்கி நல்வாழ்வு வாழவேண்டும் நாம், என்பதே இன்றைய எமது நற்சிந்தனையாகும்.

# 24 - எழுத்தறிவித்தவன் இறைவன்

மாதா, பிதா, குரு ஆகியோர் தெய்வங்களுக்கு ஒப்பானவர்கள் என்று கொள்கிறது சைவமரபு. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"; "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்" என்னும் ஆன்றோர் வாக்குகளே இதற்குச் சான்று பகர்கின்றன. இவர்கள் கண்கண்ட தெய்வங்கள், நடமாடும் தெய்வங்கள், வழிகாட்டும் தெய்வங்கள், வாழ்வளிக்கும் தெய்வங்கள் என சைவமரபு நமக்கு அறிவிக்கிறது. எங்களுடைய சைவக் கல்வி மரபு, கல்வி கற்பித்த ஆசிரியரைத் தெய்வமாகப் போற்றுக என்றும் வணக்கத்திற்குரியவர் என்றும் கூறுகிறது. குரு நிந்தை பஞ்சமாபாதங்களுள் ஒன்றாகச் சைவம் குறிப்பிடுகிறது. ஆசிரியர் எமக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்கிறார். அவருக்கு நன்றியுள்ளவராக என்றென்றும் இருக்க வேண்டியது, கல்விகற்ற ஒவ்வொருவரினதும் கடன் ஆகும். எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டு, ஆனால் செய்ந்நன்றிகொன்றார்க்கு உய்வில்லை என்பது தமிழ்மறை கண்ட முடிபு.

குருவாக, இறைவனே வருகிறார். குருவாகக், கயிலையிலே கல்லால மர நிழலிலே, தென்திசை நோக்கி அமர்ந்து, ஜனகர் முதலிய முனிவர்களுக்கு, மோன நிலையில், சின்முத்திரையால் ஞானத்தை உணர்த்தியவர் தட்சிணாமூர்த்தி. அவர் சிவமூர்த்தியேயாவர். சைவசமயத்தவரின் குரு பரம்பரை அவரிலிருந்தே ஆரம்பிக்கின்றது. குரு வணக்கம், சிவ வணக்கம் ஆகும். குருவை நிந்தித்தல், சிவனை நிந்தித்தல் ஆகின்றது. குருவில்லா வித்தை பாழ்.

குரு என்பதன் பொருள் அறியாமையை நீக்கி அறிவைத் தருபவர் என்பதாகும். "கு" என்றால் இருள், "ரு" என்றால் அருள். எனவே குரு என்றால் இருளை அகற்றி, ஒளியைத் தந்து அருள்பவர் என்பதாகும். இருள் அறியாமையையும் ஒளி, அறிவையும் குறிப்பன. ஆன்மாக்கள் அறிவித்தால் அறியக் கூடியவை, தாமாக எதையும் அறியமாட்டாதவை. எனவே, ஆன்மாக்களாகிய எமக்கு யாராவது அறிவிக்க வேண்டும். நாம் அறிந்து கொள்வதற்கு எமக்கு அறிவிக்க, அறிவைத் தர ஒருவர் தேவை என்பது புலனாகின்றது. அறிவைத் தந்து அறியாமையை நீக்கக் கூடிய ஒருவரையே குரு என்கிறோம்.

ஞான குருவாகவும், ஆசிரிய குருவாகவும், குருவை நாம் காண்கின்றோம். பக்குவம் அடைந்த ஆன்மாக்களுக்கு தீட்சையளித்து மேனிலையை அடையச் செய்பவர் ஞானகுரு. "ஞானத்தைக் கொடுத்து மும்மலங்களையும் கெடுப்பது" என்னும் பொருளுடையது தீட்சை என்னுஞ் சொல். இதனை நடத்துபவர் ஞானகுரு.

கல்வி கற்பிப்பவர், நல்வழி காட்டுபவர் யாவரும் ஆசிரியர்கள் எனப்படுகின்றனர்.

இன்று பாடசாலைகளிலும் கல்லூரிகளிலும் கல்வி கற்பிப்பவர்களையே ஆசிரியர் என்கிறோம். ஆசு+இரியர் என இச் சொல்லைப் பிரிக்கலாம். "ஆசு" என்றால் குற்றம், "இரியர்" என்றால் நீக்குபவர் என்று பொருள் கொள்வர். எனவே, ஆசிரியர் என்பதன் கருத்து குற்றத்தை நீக்குபவர் என்பதாகும். குற்றத்தை நீக்குபவர், குற்றம் உள்ளவராகவோ, குற்றஞ் செய்பவராகவோ இருத்தல் ஆகாது என்பது இதிலிருந்து பிறக்கும் மற்றொரு கருத்தாகும்.

பாடசாலை, இளந்தலைமுறையினரின் அறிவு வளர்ச்சிக்கும், திறன் விருத்திக்கும், மனநல வளர்ச்சிக்கும், பண்பாட்டு, ஒழுக்க, ஆன்மிக மாண்பு வளர்ச்சிக்கும், ஒட்டு மொத்தமாக ஆளுமை விருத்திக்கும் உதவும் சமூக நிறுவனமாகும். எனவே எல்லாச் சமூக நிறுவனங்களிலும் மிகச் சிறந்ததும் தலையாயதுமான நிறுவனம் வித்தியாலயம் ஆகும். அறிவு கொலுவிருக்கும் ஆலயமே வித்தியாலயம். கோயிலில்லா ஊரில் குடியிருக்கக் கூடாது என்பது ஆன்றோர் வாக்கு. அந்த வாக்கு வித்தியாலயத்தையும் உள்ளடக்கித்தான் கூறப்பட்டது என்பது ஊகிக்கத்தக்கது. உலகு இதவரை அறிந்த அறிவினைத் தொகுத்து வழங்குவதோடு, மாணவரின் உள்ளங்களில் உள்ளார்ந்த நிலையில் ஆழ்ந்து கிடக்கும் அறிவு, பல்வேறு திறன்கள், ஆற்றல்கள், வல்லபங்கள், பண்புகள், விழுமியங்கள் என்பனவும் வெளிக் கொணர உதவும் சமூக நிலையம் பாடசாலையாகும். கல்வி என்பது மனிதனுள் ஆழ்ந்த கிடக்கும் பரிபூரணத்துவத்தை மலரச் செய்து வெளிப்படுத்துவது என்று சுவாமி விவேகாநந்தர் கல்விக்கு வரை விலக்கணம் கூறுவர். பாடசாலையில் நடைபெறுவது மனித உருவாக்கம். அதை நடத்தி வைப்பவர்தான் ஆசிரியர். ஆசிரியர்கள் சமுதாயச் சிற்பிகள் ஆவர். சமுதாயத்தின் எழுச்சியோ, வீழ்ச்சியோ, ஆசிரியர்களில்தான் தங்கியுள்ளது. இத்தகைய ஆசிரியர்களை, சமுதாயம் மதித்து மரியாதை செய்தல் வேண்டும். அதேவேளை ஆசிரியர்கள் தங்கள் வாழ்க்கை முறை மூலம், சமுதாயத்தின் மதிப்பைப் பெறுவதற்கு அருகதையும் தகுதிப்பாடும் உடையவராகத் தம்மை ஆக்கிக் கொள்ளவும் வேண்டும்.

"என் வாழ்வே உனக்கான உபதேசம்" என்பதை மாணவர்க்கு உணர்த்தும் ஆசிரியப் பெருந்தகைகளையே இன்று உலக சமுதாயம் வேண்டி நிற்கின்றது என்பதை உணர்வோமாக.

"மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"

# 25 - இறைபக்தியால் இன்பம் காண்போம்

"நீ இறைவனிடம் பக்தி கொண்டிருப்பாயெனில், உன் எதிர்காலத்தை அவரே பார்த்துக் கொள்வார்." இது எமது சைவ சமயம் தரும் உறுதிமொழி. சைவ சமயிகளாகிய நம்மில் எத்தனைபேர் இந்த உறுதி மொழியில் நம்பிக்கையுடையவராய் இருக்கின்றனர் என்பது இப்பொழுது எழுகின்ற கேள்வி. எங்களால் எல்லாம் ஆகும் என, நாம் எண்ணிக் கொண்டிருப்பதுதான், இந்த உறுதிமொழியை அலட்சியம் செய்வதற்கு ஏதுவாகின்றது. நாம் நினைத்தவை எல்லாம் நடந்து விடுகின்றனவா? இல்லையே. எங்களால் எல்லாம் ஆகும் என்றால் நாம் நினைத்தவை எல்லாம் ஏன் நிறைவேறுவதில்லை? இது பற்றி நாம் சிந்திக்க வேண்டும்.

"ஒன்றை நினைக்க அது ஒழிந்திட்டொன்றாகும். அன்றி அது வரினும் வந்தெய்தும்" என்கிறார் ஒளவைப்பிராட்டியார். சில சமயங்களில் நாம் நினைத்ததைச் சாதித்து விடுகின்றோம். அப்பொழுது வெற்றிக் களிப்பில் மிதக்கின்றோம். சிலவேளைகளில் நாம் நினைத்தபடி நடந்துவிடுவதில்லை. உடனே துவண்டு விடுகிறோம். இறைவனையே வைது விடுகின்றோம். நாம் நினைத்தது நிறைவேறிவிட்டால், அந்த வெற்றிக்கு நாம் தான் காரணமென் கின்றோம். ஆனால், நிறைவேறாவிட்டால், தோல்விக்கும் நாமே காரணம் என்பதை ஏற்றுக் கொள்வதில்லை. இறைவன் மீது பழியைச் சுமத்தி விடுகிறோம். மனிதரது இத்தகைய விசித்திர நடத்தை பற்றியும் நாம் சிந்திக்க வேண்டும்.

பிள்ளையார் பிடிக்க, குரங்காய் வந்த கதைதான், எம்மால் எல்லாம் ஆகும் என்று இறுமாப்புக் கொள்வது. நாம் எமது உண்மை நிலையை விசாரித்து அறிந்து கொள்ளுதல் அவசியம். அப்பொழுதுதான் எம்முடைய ஆற்றல் எவ்வளவு என்பதை மதிப்பிட்டுக் கொள்ள முடியும். எம்மால் இயலக்கூடியவை எவை, எம்முடைய இயல்புக்கு அப்பாற்பட்டவை எவை என்பதைத் தெரிந்து கொள்ள முடியும். இதிலிருந்து, மனிதர்கள் ஆகிய எமக்கு எல்லைப்படுத்தப்பட்ட ஆற்றலே உண்டு என்பது தெரியவருகிறது. ஆனால் இறைவனோ வரம்பில்லாத ஆற்றலுடையவன். இறைவனின் திருவருள் இன்றி நம்மை நாமே பார்த்துக் கொள்ளமுடியும் என எண்ணு வது எமது அறிவீனத்தையே காட்டுவதாகும். இறைவனை விசாரித்து, அவனின் திருவருள் துணையுடன் ஆற்றும் கருமங்களே வெற்றியாகும். அவனை விசாரித்துச் செய்யும் கருமங்கள் நல்லனவாகவே அமையும். "அவனின்றி ஓர் அணுவும் அசையாது" என்பதைக் கருத்திற்கொள்ளல் அவசியம்.

இறைவனின் திருவருளைப் பெறுவதற்கு இலகுவான வழி, அவனைப்

பக்தி செய்தல் அகும். இறைவன் மீது இடையறாது பக்தி செலுத்த வேண்டும். பக்தி எமக்குச் சக்தியை வழங்குகிறது. சக்தி விவேகத்தைத் தருகிறது. அந்த விவேகம் சரியானவற்றைச் செய்யவும், பிழையானவற்றைச் செய்யாது தவிர்க்கவும் உதவுகிறது. கடவுள் பக்தி எம்மை நல்வழிப் படுத்துகிறது.

இன்ப துன்பங்களைச் சமமாகக் கொள்ள பக்தி எம்மை வழிநடத்துகின்றது. அவரவர் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப இப்பிறப்பில் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றனர். துன்பங்களை அனுபவித்துத்தான், நாம் செய்த தீவினைகளைத் தொலைக்க வேண்டும். எமது வினைகளைப் பிறருடன் பகிர்ந்து கொள்ள முடியாது. நல்லதோ, கெட்டதோ நாமே அனுபவித்துத்தான் தீர்க்க வேண்டும் என்பது சைவசித்தாந்தத்தின் முடிவு. எனினும், கடவுள் மீது நாம் பக்தி கொள்வதன் மூலம், கடவுளின் திருவருட்சக்தியைப் பெற்று, எந்த அளவு துன்பத்தையும் தாங்கிக் கொள்ளும் வல்லமையுடையராகி விடுகின்றோம். பக்தியால் மட்டும்தான் இந்தச் சக்தி எமக்குக் கிடைக்கிறது. ஆக, நாம் கடவுட் பக்தியுடையவராய் இருப்பதினால், நாம் முன்னர் செய்த தீவினைகளின் பயனாக இப்போது அனுபவிக்கின்ற துன்பங்கள் துயர்களைத் தாங்கிக் கொள்வதற்கான தைரியத்தையும் ஆற்றலையும் பெற்றுக் கொள்வதுடன், இப்பிறப்பில் தீயவை, தீங்குகள், கொடுமைகள், பாவங்கள் என்பவற்றைச் செய்யாமல் எம்மை நல்வழிப்படுத்தவும் முடிகிறது. இவ்வாறு எம்மில் அபிவிருத்தியடைந்து வருகின்ற கடவுட் பக்தி, இறுதியில் முத்தி என்னும் விடுதலையையும் அளிக்கின்றது.

இறைவன் மீது பக்தி செலுத்துவதற்கு எவ்வித பணச் செலவோ, பொருட் செலவோ, வேறு எவரினதும் செல்வாக்கோ சிபார்சோ தேவைப்படாது. அதனால், ஏழை, செல்வந்தன், உயர்ந்தவன், தாழ்ந்தவன், வேண்டியவன், வேண்டாதவன் என்ற எவ்வித பாகுபாடுகளுமின்றி கடவுளில் பக்தி செலுத்த எல்லோருக்கும் முடியும். பக்தி மார்க்கத்தின் பெருஞ்சிறப்பு இதுவாகும்.

இறைவனிடம் பக்தி கொள்வது ஆனந்தத்தை அளிக்கும். வாழ்வில் செழுமையைக் கொடுக்கும். சாந்தியை அளிக்கும். அது மனக் குழப்பத் தையோ, கவலைகள் கஷ்டங்களையோ அளிக்கமாட்டாது. அவற்றை நீக்கிவிடும். பக்தி அன்பினை வளர்த்து, அனைவருடனும் சகோதர உறவை ஏற்படுத்துகிறது. ஆன்மிக ஒருமைப்பாடு உணரப்படும் போது எங்கும் சாந்தி. எங்கும் சமாதானம். எங்கும் ஆனந்தம்.

# 26 - திருநீற்றின் மகிமை

சைவத்தின் மேன்மை, திருநீற்றின் மேன்மையாகும். சைவசமயகுரவர் நால்வர், திருநீற்றை விளங்கச் செய்தவர்கள் என்று சேக்கிழார் பெரிய புராணமும், வேறு நூல்களும் கூறும். அந்த வகையிலேயே அவர்கள் சைவத்தை விளங்கச் செய்தவர்கள் ஆகின்றனர். திருநீறு சைவத்தின் சின்னம் எனப்படுகிறது. சின்னத்தை வணங்குதல் நமது மரபு. திருநீறு, சைவத்தின் மந்திரமும், தந்திரமும், மருந்துமாகி, தீரா நோய் தீர்த்தருளும் வல்லமையையும் உடையது. நோய்களுள் இலகுவில் தீர்க்க முடியாத நோய் பிறவி நோய். அந்தப் பிறவிப் பிணியைக் கூடத் தீர்க்கும் ஆற்றலைத் திருநீறு கொண்டுள்ளது என்று அனுபூதிமான்கள் கூறியுள்ளனர்.

சிவபெருமானுக்கு மிகவும் பிடித்தது திருநீறு. மெய்யடியவர்கட்கு அண்மையன் ஆக விளங்கும் சிவன் "வெண்மையன்" என்று குறிப்பிடப்படுகிறான். மேனி முழுவதும் திருநீறு பூசப்பட்ட நிலையில் சிவன் வெண்மையன் ஆகினான்.

"பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்"
"பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்"
"பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்"
"பூசில் தாம் திருநீறே நிறையப் பூசிப் போற்றியெம் பெருமானே."

இவ்வாறு சிவனின் மேனி முழுவதும் திருநீறு அணியப் பெற்றிருத்தலை அருளாளர்கள் பலவாறு தாம் அருளிய திருமுறைப் பாக்களில் விபரித்துள்ளார்கள். திருக்கோயில் இல்லாத ஊர்போன்றே, திருவெண்ணீறு அணியாத மனிதர்கள் வாழுகின்ற ஊரும் ஊரல்ல. அடவி காடே என்கிறார் அப்பர் அடிகள். "நெய்யில்லா உண்டி போல;" "ஆறில்லா ஊர்போல;" "மனையாள் இல்லாத வீடுபோல;" திருநீறு இல்லா நெற்றியும் அழகு கெட்டுப் பாழ் அடைந்த நிலையில் காணப்படும்.

திருநீறு பூசுதல், ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மல நீக்கத்தைக் குறிப்பதாக நூல்கள் பேசும். தீட்சை பெற்று அனுட்டானம் பார்ப்பவர்கள் திருநீற்றைத் திரிபுண்டரமாக நெற்றியிலும் மற்றும் குறித்த அங்கங்களிலும் திருவைந்தெழுத்தோதிப் பூசுவர். சிவசின்னம் அல்லவா திருநீறு. ஏன் சிவம் என்றே அதனைக் கூறலாம். திருநீற்றைச் சிவமாகப் பூசித்து முத்தி பெற்ற சிவனடியார் சிறப்புப்பற்றிச் சேக்கிழார் பெரிய புராணம் கூறுகின்றது. இன்றும் திருநீறு ஓதிக் கொடுத்துப் பிணிகளையும் நோய்களையும் வேறு கண்ணூறு, நாவூறு முதலிய தோஷங்களையும் அகற்றுபவர்களைக் காண்கின்றோம்.

திருநாவுக்கரசரின் சூலைநோய், தமக்கையார் திலகவதியார் கொடுத்த திருநீற்றை அணிந்த போது தணிந்தது. பாண்டியன் நெடுமாறனின் வெப்புநோய், சம்பந்தப் பெருமான் திருநீறு வழங்கியதும் நீங்கப் பெற்றது. அத்துடன் மன்னனின் வளைந்த முதுகும் நிமிர்ந்தது. என்னே திருநீற்றின் மகிமை.

திருநீறு கொண்டு பார்வை பார்த்து உடல் நோய்கள், மனச் சஞ்சலங்கள் நீக்கப்படுவதை நாம் காண்கிறோம். இது ஒன்றும் மூட நம்பிக்கையல்ல, நன்னம்பிக்கை. திருநீறு தரித்துப் பிரயாணம் மேற்கொள்பவர்களுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படுவதில்லை. இரவில், இறைவனை நினைந்து விபூதி பூசி, திருவைந்தெழுத்து மந்திரம் செபித்து, படுக்கையில் படுத்தால், நிம்மதியான தூக்கம் வரும். இடையில் நித்திரை குழம்பாது. கெட்ட கனவுகள் தோன்றமாட்டா. எவ்வித பயமும் இருக்காது. இன்று நித்திரையின்றித் தவிப்பவர்கள் பலர் உள்ளனர். அவர்கள் திருநீற்றின் துணையை நாடினால் நன்மை பெறமுடியும்.

வேதத்தில் உள்ளது நீறு, வெந்துயர் தீர்ப்பது நீறு என்று அருளாளர் நமக்கு உறுதி கூறுகின்றனர். சைவர்கள் ஆகிய நாம் திருநீறு அணிவதற்கு வெட்கப்படக் கூடாது. பவுடர் பூசுவதற்கு நாம் வெட்கப்படுவதில்லையே. ஒரு நாளுக்கு எத்தனை தடவைகள் திரும்பத்திரும்பப் பவுடர் பூசுகிறோம். செல்லுமிடமெல்லாம் மறவாமல் அதனைக் கொண்டு போகின்றோம். ஆனால் எவ்வளவோ நன்மைகளைத் தரும் எமக்கே உரிய திருநீற்றினை உதாசீனம் செய்கின்றோம். அதனாலேயே நாம் பல கெடுதிகளைச் சந்திக்க வேண்டியுள்ளது என்பதைச் சிந்திக்கிறோம் இல்லை. நோய் பயம், சோரர் பயம், துஷ்டர் பயம், விபத்துக்கள் பயம், மரண பயம், கெட்ட தேவதைகள் பயம் என்பவற்றை நீக்கி, உடல் சுகம், மனச் சுகம், மன உறுதி, தைரியம் என்பவற்றை நமக்குத் தரவல்லது திருநீறும் திருவைந்தெழுத்து மந்திரமும் என்பதை நாம் உணர்ந்து கொள்வோம். இக சுகம் மாத்திரமன்று, பரசுகமும் கிடைக்கப் பெறலாம். நாம் ஆன்மிகச் செல்வர்கள். ஆனால் ஆன்மிக வறியவர் போல ஏன் வாழ வேண்டும். நம் முன்னோர்கள், ஆன்றோர்கள், அநுபூதி மான்கள் என்போர் கண்டு, கேட்டு, அனுபவித்து, நன்மைபெற்று எமக்கு ஈந்த மாபெரும் சொத்து, இந்த ஆன்மிகச் சொத்து. மேல்நாடுகளிலிருந்து எம்முடைய ஆன்மீகச் சொத்தை அனுபவிக்க எத்தனையோபேர் வருகிறார்கள். ஆனால் நாம் மட்டும் எமது சொத்தினை அனுபவியாமல் இருக்கின்றோம். கேலியும் கிண்டலும் செய்கின்றோம். நாடகத்திலும் சினிமாவிலும் கொடுமையாளர் பாத்திரங்கள் தாங்குவோரின் நெற்றியில், திருநீற்றுப்பட்டை தீட்டி, திருநீறு அணிபவர்கள் கொடுமையாளர்கள் என்று

சித்திரித்துக் காட்டும் போது நாம் இரசித்து மகிழ்கிறோம். திருநீற்றை அவமரியாதை செய்வதாக இது அமைகின்றது என்பதை நாம் உணர் வதில்லை. திருநீறு சிவசின்னம். அது சைவமக்களின் வணக்கத்திற்குரிய பொருள். மதிப்பிற்கும் மரியாதைக்கும் போற்றுதற்கும் உரியது. திருநீற்றை அவமதித்தல், இறைவனை அவமதித்தல் ஆகும். சிந்திப்போம் திருநீற்றினை மதிப்போம். நல்வாழ்வு பெறுவோம்.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"

# 27 - கடவுளை நம்பினோர் கைவிடப்படார்

செல்வங்கள் யாவும் நிறைய இருக்கின்றன. பொருள், கல்வி, புகழ், பதவி, மனைவி, மக்கள், மாளிகை மற்றும் வாழ்க்கை வசதிகள் அனைத்தும் நிரம்பப் பெற்றுள்ளேன். எனக்கு ஒரு குறைவும் இல்லை. இத்தனை செல்வங்களையெல்லாம் நானே தேடிப்பெற்றேன். என் முயற்சியினால் அடைந்தேன். வேறு எவரும் இவற்றைப் பெறுவதற்குத் துணையாக வரவில்லை - என்று இவ்வாறு கூறித் தற்பெருமையும், தற்புகழ்ச்சியும் கொள்பவர் பலரை நாம் அன்றாடம் சந்திக்கிறோம. இவர்கள் ஒன்றை அடிக்கடி நினைவு கூருகிறார்கள். அதுதான், தன்னுடைய செல்வநிலைக்குத் தானே காரணம் என்பதை. ஆனால் மற்றொன்றை அறவே மறந்து விடுகிறார்கள். அதுதான் தனக்குத் தோன்றாத் துணையாக என்றும் உடன் இருந்து உதவுகின்ற தெய்வத்தை.

வாழ்க்கையில் எல்லா வசதிகளையும் பெற்று வளமாக வாழும் போது, மனிதர்கள், கடவுளை விட்டு விலகி வெகுதூரத்தில் வாழ்வதாக எண்ணிக் கொள்ளுகிறார்கள். கடவுள் பற்றிய நினைப்பே வருவதில்லை. கடவுளை அவர்களுக்குத் தேவைப்படுவதுமில்லை. தம்மால் எல்லாம் இயலும் என்ற அகம்பாவம் அவர்களை ஆட்கொண்டு விடுகின்றது.

கடவுளை விட்டு விலகியிருப்பவர்கள், வாழ்வில் நீதி நெறியை விட்டும் விலகியிருப்பார்கள் என்பது தெளிவான விடயம். அவ்வாறே, அன்பு, அறம், அஹிம்சை, உண்மை, நல்லொழுக்கம் போன்ற தெய்வீகப் பண்புகளும் அவர்களை விட்டு விலகிப் போய்விடும். தெய்வம் உறையாத இடத்தில், தெய்வீகக் குணங்கள், பண்புகள், இயல்புகள் என்பன இருக்கும் என்று எதிர்பார்ப்பது இயலாத காரியம்.

இத்தகைய செல்வங்கள் யாவும் எப்படிக் கிடைத்தன என்பதை எங்கே கடவுளைக் கிட்ட வைத்திருந்தால் அறிந்து விடுவாரோ என்ற அச்சத்தினால் போலும், அத்தகையவர்கள் கடவுளைத் தூர வைத்துக் கொள்ளுகிறார்கள். நீதியோடும் உண்மையோடும் நெருங்கிய உறவு கொண்டால், அவற்றிற்குப் புறம்பான வழிகளில் செல்வத்தைத் தேடிக் கொள்ள அனுமதிக்கப்பட மாட்டார்கள் என்பதினால் நீதி நெறியையும், உண்மையையும் விட்டு விலகியிருக்கின்றனர்.

தெய்வத்தை விட்டு விலகியிருந்து கொண்டும், நீதியைப் புறக்கணித்து விட்டும், செல்வத்தைத் தேடி எப்பொழுதும் வளமாக வாழலாம் என்று

நினைப்பது அவர்களின் அறியாமையைக் காட்டுவதாகும். கடவுள் எல்லாம் அறிபவர். எங்கும் உள்ளவர் என்ற கடவுள் பற்றிய ஆரம்பப் பாடத்தையேனும் கற்று அறிவு பெறாதவர் ஆகிவிடுகின்றனர். கடவுளுக்கு ஒழித்து எந்தச் செயலையும் செய்துவிட முடியாது. ஏன் சிந்திக்கவும் முடியாது என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

அதேவேளை, கடவுளை விட்டு விலகி இருக்கலாம் என்று எண்ணு வது ஒரு வெறும் பிரமை அல்லது நினைப்பு என்றே கூறவேண்டும். உண்மையில் கடவுள் எம்முடன் இருந்துகொண்டே, நாம் செய்யும் நல்ல காரியங்களை யும், தீய காரியங்களையும் சதா நேரமும் அவதானித்துக் கொண்டே இருக்கிறார்.

தெய்வத்தை விட்டு விலகி வருகிறார்கள் மனிதர்கள் என்றால் அதன் பொருள், நல்ல பண்புகளை, நல்ல குணங்களை, நல்ல இயல்புகளை மற்றும் நீதி, நேர்மை, அறம் என்பவற்றை வாழ்க்கையில் கைக்கொள்ளாமல் இருந்து வருகிறார்கள் என்பதாகும்.

மனித வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகின்றன. அவ்வாறு துன்பங்கள் வாழ்க்கையில் வரும்போதுதான் மனிதர்களுக்குக் கடவுளின் நினைப்பு, தெய்வத்தில் நம்பிக்கை என்பன மீண்டும் வருகின்றன. எல்லாம் என் செயல் என்று கொண்ட நிலையிலிருந்து மீண்டு, இறைவா, என் செயலால் ஆவது இனி ஒன்றும் இல்லை. எல்லாம் உன் செயலே என்று உணரப் பெற்றேன் என்று அலறிக் கொண்டு கடவுளை நோக்கி விரைகின்றனர். இந்த நிலையிலும், தெய்வத்தை நோக்கிப் போகின்றார் களே தவிர, தெய்வீகக் குணங்களையும், தெய்வீகப் பண்புகளையும் விட்டு விலகியே பெரும்பாலோர் காணப்படுகின்றனர். தெய்வ சந்நிதியில் நின்று கொண்டும், தெய்வத்தின் புகழ் பாடிக் கொண்டும் இருந்தாலும் கூட, நீதி நெறியை விட்டு விலகியும், உண்மையைப் புறக்கணித்தும், பொய்யையும் ஏமாற்றுதலையும் வாழ்க்கைப் பழக்கமாகக் கொண்டும் வாழ்ந்தால் வாழ்வில் நிம்மதி எப்படி வரும்? அமைதி எங்ஙனம் தோன்றும்? இன்பம் எவ்வாறு கிடைக்கும்?

தெய்வத்தை நோக்கிச் செல்லும்போது தெய்வீகக் குணங்களையும் பண்புகளையும் தழுவிச் செல்லுதல் வேண்டும். தெய்வம் வேறு. தெய்வீகக் குணங்கள் வேறு அல்ல. அன்பும் சிவமும் இரண்டல்ல. நீதியும் இறைவனும் வேறல்ல. அன்பே சிவம். நீதியே இறைவன் என்ற உண்மையை உணர்ந்து கொண்டால், வாழ்வில் எந்நாளும் இன்பமேயன்றித் துன்பத்தைச் சந்திக்கும் இடர்ப்பாடு ஏற்படாது என்பது உறுதி.

உண்மையான இன்பம், அமைதி, நிம்மதியைப் பெறக் கடவுள் நம்பிக்கை வேண்டும். கடவுளில் நம்பிக்கை கொள்ளும் போதுதான், தெய்வீகப் பண்புகளை அணைத்துக் கொள்ள முடிகின்றது. இந்த நிலை ஏற்படும் போது தொல்லைகள் மறையும். துன்பங்கள் துவண்டு ஓடிவிடும். அமைதியும் ஆனந்தமும் தாமாகவே மலர்ந்து எம்முடன் நிரந்தரமாகத் தங்கிவிடும். "கடவுளை நம்பினார் கைவிடப்படார்" என்பதில் உறுதியான நம்பிக்கை கொள்வோமாக.

# 28 – முந்தையோர் கண்ட வாழ்வுமுறை

ஆசாரக் கோவை என்னும் நூல் கடைச் சங்கத்தைச் சார்ந்த பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. பண்டைய தமிழ்மக்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்துப் போற்றிய வாழ்க்கை ஆசாரங்களைக் கோவைப்படுத்தித் தரும் நூலாக விளங்குகின்றது. இதைப் படிப்பவர்கள், போற்றி வாழ்பவர்கள் தற்காலத்தில் மிகக் குறைந்து விட்டனர். ஆசாரம் என்பதன் பொருள் ஒழுக்கம் என்பதாகும். மனிதன் செய்ய வேண்டியவற்றையும், செய்யாது தவிர்க்க வேண்டியவற்றையும் ஆசாரக் கோவை எனும் நூல் கோடிட்டுக் காட்டுகின்றது. படிப்பறிவு மேலோங்கியிருந்தும், எவற்றைச் செய்தல் முறையாகும். எவற்றைச் செய்யாமல் விடுதல் நல்லதாகும், என்னும் அறிவும் திறனும் மனப்பாங்கும் தற்காலத்தில் நம்மவர்களிடம் பெரிதும் வளர்ச்சியடையாமல் இருத்தல் அவதானிக்கக் கூடியதாக உள்ளது. உலகம் பழுதடைவதற்கு இந்நிலைமை பிரதான காரணம் ஆகின்றது.

அந்நூல் கூறும் நல்ல கருத்துக்கள் சிலவற்றை இன்றைய சிந்தனைக்கு எடுத்துக் கொள்வோம்.

> "நன்றியறிதல், பொறையுடைமை, இன் சொல்லோடு
> இன்னாத எவ்வுயர்க்கும் செய்யாமை, கல்வியோடு
> ஒப்புரவு ஆற்ற அறிதல், அறிவுடைமை,
> நல்லினத்தாரோடு நட்டல் – இவை எட்டும்
> சொல்லிய ஆசார வித்து"

என்பது பாடல். நாம் வாழ்க்கையில் மேற்கொண்டு ஒழுக வேண்டிய ஆசாரங்கள், ஒழுக்க நெறிகள் என்பன பல இருக்கின்றன. அவையெல்லாம் தோன்றி வளர்வதற் குரிய வித்துக்களாக எட்டு ஆசாரங்கள் இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றைச் சைவத்தின் அட்ட சீலங்களாகக் கொள்வோமானால் வாழ்க்கையில் ஒரு பொல்லாப்பும் ஏற்படாது. இடர்கள் துன்பங்களைச் சந்திக்கவும் நேரிடாது. அந்த ஆசார சீலங்களாவன: தனக்கு மற்றவர் செய்த உதவியை மறவாமையாகிய செய்ந்நன்றியறிதல், தனக்கு நேரும் துன்பத்தைச் சகித்துக் கொள்ளலாகிய பொறையுடைமை, எஞ்ஞான்றும் எவருடனும் இன்சொற்களினாலேயே கருத்துப் பரிமாற்றம் செய்தலாகிய இனியவை கூறல். பிற உயிர்களுக்குத் துன்பம் தருவனவற்றைச் சிந்தையாலும், பேச்சினாலும், உடம்பினாலும் செய்யாமை என்னும் அஹிம்சை, அறிவொளியை ஏற்றி வைக்கும் கல்வி, உலக

நடையை அறிந்து, செந்தண்மை பூண்டு ஒழுகலாகிய ஒப்புரவு அறிதல், ஆழ்ந்து, அகன்று நுண்ணிய அறிவுடைமை, நல்ல பழக்கங்கள், பண்பாட்டு ஒழுக்கங்கள் என்பவற்றைப் பேணி வாழும் நன்மக்களுடன் நட்புக் கொள்ளல் என்னும் எட்டும் ஆகும்.

வாழ்க்கையில் நல்லொழுக்கத்தைத் தவறாமல் அநுசரித்து ஒழுகுபவர்கள் அடையும் நன்மைகள் எவை என்பதைப் பின்வரும் ஆசாரக் கோவைப் பாடல் கூறுகிறது.

"பிறப்பு, நெடுவாழ்க்கை, செல்வம், வனப்பு
நிலக் கிழமை, மீக்கூற்றம், கல்வி, நோயின்மை
இலக்கணத்தால் இவ்வெட்டும் எய்துப என்றும்
ஒழுக்கம் பிழையாதவர்"

ஒழுக்கத்தை உயிரினும் மேலாக ஓம்பி, ஒழுக்கத்தினின்றும் எக்காலத்தும், எத்தகைய சூழலிலும் தவறாதவர்கள் நல்ல மனிதப் பிறப்பு, நீண்ட ஆயுள் உடன் கூடிய வாழ்வு, நிறைந்த செல்வம், மிகுந்த அழகுடைமை, நிலத்துக்கு உரிமை, சொல் மேன்மையும் செல்வாக்கும், கல்வி, நோயற்ற சுக வாழ்வு என்னும் எட்டு நன்மைகளையும், நல்லொழுக்கத்தில் சிறந்தவர்கள் அடைவர்.

முந்தையோர் கண்ட வாழ்வுமுறை எப்படியானது என்பதைப் பாருங்கள்.

"வைகறை யாமம் துயிலெழுந்து, தான் செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து, வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்டமுறை" என்பது அப்பாடல். வைகறை என்பது விடிய ஐந்து நாழிகை அல்லது இரண்டு மணித்தியாலங்களுக்கு முன் உள்ள காலப்பகுதி. பிரம்ம முகூர்த்த வேளை என்று இந்நேரம் குறிப்பிடப்படுகிறது. நல்ல எண்ணங்கள், உணர்வுகள் சிந்தையில் எழுகின்ற நேரம். சிந்தை தெளிவாக உள்ள நேரம். அத்தகைய அதிகாலையில் நித்திரை விட்டெழுந்து, தான் செய்ய வேண்டிய அறம் சார்ந்த, நீதி தழுவிய செயல்களையும், வழிமுறைகளையும் எண்ணி ஆராய்ந்து, விடிந்த பின் தாய் தந்தையரைத் தொழுது வணங்கி, அவர்களின் பணிவிடைகளை ஒப்பேற்றி, அதன்பின் அன்றைய தனது கடமைகளிலும் தொழில்களிலும் சோர்வின்றி ஈடுபடுதல் வேண்டும் என்பதே அறிவுடைய சான்றோர் சொல்லி வைத்துள்ள முறைமையும் நெறியும் ஆகும். சைவம் ஒழுக்கத்திற்கே முதல் இடம் அளித்துள்ளது. இதனை உணர்ந்து சைவ ஆசாரங்களையும், நெறிமுறைகளையும் வாழ்வில் பேணி நலம் பெறுவோமாக.

# 29 - உடம்பு - இறைவனின் ஆலயம்

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" - திருமந்திரம்

இந்தச் சரீரத்தை எமக்கு ஈய்ந்தவர் இறைவன். அதனால் அதை நன்கு பேணிப் பராமரிக்க வேண்டியது நமது கடமை. அதனை உதாசீனம் செய்தால், அதனை வழங்கிய கடவுளை அவமதிப்பதாகவே அமையும். அவ்வாறே எமது உடம்பைத் துர்ப்பிரயோகம் செய்தலும் ஆகாது. அவ்வாறு செய்தால், அதனை நமக்கு ஈய்ந்த கடவுளை நிந்தித்த குற்றத்திற்கு ஆளாவோம். இந்த உடம்பைத் துர்ப்பிரயோகம் செய்ய நமக்கு உரிமை யில்லை. பாவச் செயல்கள் செய்வதற்கு இந்த உடம்பையும் அதனுள் இருக்கும் புலன்களையும் மற்றும் கருவி கரணங்களையும், பயன்படுத்துவது கடவுளுக்குச் செய்யும் துரோகம் ஆகும். இந்த உடம்பும் புலன்களும் மனமும் கடவுள் தந்த சொத்து. அவை கடவுள் எமக்கு அருளிய நம்பிக்கைச் சொத்துக்கள். கடவுளை விசாரிக்காமல், அவரின் உடன்பாட்டினைப் பெற்றுக் கொள்ளாமல் நம் எண்ணப்படி, இந்த உடம்பையும் மற்றும் கருவி கரணங்களையும் பயன்படுத்துவது, நம்பிக்கைக்கு இரண்டகம் செய்வதாய் அமையும். எனவே இறைவனை விசாரித்து அவன் ஒப்புதல் பெறாமல் இந்த உடம்பினை நாம் பயன்படுத்தக் கூடாது.

இந்த உடம்பினை இறைவன் எமக்கு ஈய்ந்த காரணத்தை நாம் ஆராய்ந்து அறிந்து கொள்ளுதல் வேண்டும். காரணம் பலருக்குத் தெரியாது. அதனால்தான் பலர் தத்தம் உடம்புகளையும், புலன்களையும், மனம் முதலிய அந்தக் கரணங்களையும் துர்ப்பிரயோகம் செய்கிறார்கள். அசுத்தப்படுத்து கிறார்கள். கடவுள் வெறுக்கின்ற செயல்களில் அவற்றை ஈடுபடுத்துகிறார் கள். கொலை, களவு, கள், காமம், பொய் முதலிய பாதகங்களை அவற்றைக் கருவிகளாகக் காண்டு புரிகிறார்கள். மனிதரின் அறியாத்தனமா அல்லது அறிந்தும் அறியாதவர் போல் நடிக்கிறார்களா என்பதுதான் புரியாத புதிராக இருக்கிறது. இந்தச் சரீரத்தை நமக்கு வழங்கிய இறைவனின் நோக்கம் என்ன என்பதை அறிந்து கொண்டால், அவனின் சித்தத்திற்கு ஏற்ப நாமும் இச்சரீரத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இந்தச் சரீரம், அதனை வழங்கிய இறைவனின் சொத்து, இறைவனின் சொத்து என்பதால், இந்தச் சரீரம் சிலர் நினைக்குமாப் போன்று அழுக்கும் அல்ல. இழுக்குமல்ல. அவ்வாறு நினைப்பது பாவம்.

இறைவன் அருளிய உடம்பின் ஒவ்வொரு அங்கமும், புலனும், உட்கரணமும் தூய்மையாக வைத்திருக்கப்பட வேண்டியவை. அவை யாவும்

மற்றும் அவற்றினின்றும் விரியும் எண்ணங்கள், உணர்வுகள், பேச்சுக்கள், செயல்கள் யாவும் தூய்மை நிறைந்தனவாக அமைய வேண்டும். அப்பொழுது தான் கடவுள் தாம் வழங்கிய பண்டங்கள் நன்கு கவனிக்கப்படுகின்றன என மகிழ்ச்சியும் திருப்தியும் கொள்வார்.

இந்த உடம்பு இறைவன் எழுந்தருளியிருக்கும் கோயில் அல்லவா. நாம் அதை அசுத்தப்படுத்த, சரியாகப் பேணாமல் அலட்சியப்படுத்த முயலுதல் தகாத செயல் ஆகும். எனவே உடம்பைத் தூய்மையாக வைத்திருத்தலும், தூய்மையான செயல்களில் ஈடுபடுத்துவதும் நம் கடமையாகும். அந்தக் கடமையை மறத்தல் மடமையாகும்.

இந்தச் சரீரத்தின் ஒவ்வோர் அணு வும், ஒவ்வோர் அங்கமும், உணர்வும் பக்தி சிரத்தையுடன் இறைவனின் தொண்டுக்கும், சேவைக்கும் உபயோகப்படுத்தப்பட வேண்டும். கடவுளின் மகிமை பெருமைகளைப் பேசுவதற்காகவும், நமச்சிவாயத்தை ஓதுவதற்காகவும் வாயைப் பயன்படுத்த வேண்டும். அவற்றைக் கேட்பதற்காக செவிகளை உபயோகிக்க வேண்டும். கைகள் இறைவனைத் தொழுவதற்கும், கால்கள் திருக்கோயிலை வலம் வருவதற்கும் பயன்படுத்த வேண்டும். மக்களின் சேவைக்காகவே உடல் முழு வதையும் அர்ப்பணிக்க வேண்டும். மக்கள் சேவை மகேஸ்வரன் சேவையாகும்.

மிகவும் உயர்ந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்காகவே இந்தச் சரீரம் நமக்குத் தரப்பட்டுள்ளது என்பதை உணர்தல் அவசியம். "இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ யாதுமறியேன்" என்கிறார் தாயுமானவ சுவாமிகள். மனிதப் பிறவி கிடைத்தது நம்முடைய பெரும் அதிர்ஷ்டமே. அந்த அரிய சந்தர்ப்பத்தை நழுவ விடாமல், இந்தப் பிறவியிலேயே நாம் உய்வு தேடிக் கொள்ள வேண்டும். மனிதப் பிறவி எடுத்ததன் பயனை அடைய வேண்டும். வீண் வேலைகள், சண்டை சச்சரவுகள், பொய் புரளிகள், பாவச் செயல்களில் ஈடுபட்டு அருமையான காலத்தை அவப்பொழுது ஆக்காமல் இறை சிந்தனையோடு, இறை வழிபாடோடு, நல்ல கருமங்களில் ஈடுபாடு கொண்டு, சேவைகள் தொண்டுகள் புரிந்து காலத்தைத் தவப்பொழுது ஆக்க வேண்டும். இந்த உடம்பு, துன்பங்களிலிருந்தும், நோய் பிணிகளிலிருந்தும் விடுதலை பெற உபயோகிக்கவே, இறைவனால் நமக்கு அருளப்பட்டது. நாமோ, இந்த உடம்பை நோய், பிணி, துன்பங்களினால் நிரப்பிக் கொண்டிரு க்கிறோம். இது எமது அறியாமை. இறைவனின் கருத்தை அறிந்து இந்த உடம்பைப் பயன்படுத்துவோம். விடுதலை பெறுவோம். இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம் என்று இறைவனின் கருத்தைத் தெட்டத் தெளிவாக நாவலர் பெருமான் எமக்கு அறிவிக்கிறார். இன்னுமா தடுமாற்றம் நாவலர் காட்டிய பாதையில் நடந்து உய்வு பெறுவோமாக.

# 30 - நற்பண்புகள்

சைவசமயம், மனித ஒழுக்கத்திற்கு அதிமுக்கியத்துவம் கொடுத்துள்ள மையை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். சைவ சமயத்தவர்க்குக் கடவுள் நம்பிக்கை, கடவுள் வழிபாடு மற்றும் சமயக் கிரியைகள், சடங்குகள், விழாக்கள் என்பன எத்துணை முக்கியமோ, அத்துணை முக்கியம் வாய்ந்தது வாழ்க்கையில் நல்லொழுக்கத்தை கடைப்பிடித்து வாழ்தல்.

சைவம் ஒரு வாழ்க்கைநெறி. வாழ்க்கையைச் சிவமயம் ஆக்குதல் சைவவாழ்வு ஆகும். வாழ்வில் நல்லொழுக்கம் பரிணமிக்கும் போதுதான், வாழ்வு சைவமயம் ஆகின்றது. வாழ்வு செழிக்கின்றது. வாழ்வு சைவமயம் ஆவதற்கு, நம் முன்னோர்கள் நல்ல வழி முறைகளைத் தந்துள்ளார்கள். அவற்றுள் சிலவற்றை நோக்குவோம்.

மாதா, பிதா, குரு, தெய்வம் ஆகியோரை நாள்தோறும் வணங்கி, மரியாதை செய்து, அவர்களை ஓம்பி, அவர்களின் சொற்கேட்டு ஒழுகி வரவேண்டும்.

“வையந்தோறும் தெய்வம் தொழு”
“தந்தை, தாய் பேண்”
“தோழனோடும் ஏழுமை பேசேல்”
“நோன்பு என்பது கொன்று தின்னாமை”
“புலையுங் கொலையும் களவுந் தவிர்”
“மூத்தோர் சொன்ன வார்த்தை அமிர்தம்”
“வஞ்சகம் பேசேல்”
“ஆறுவது சினம்”
“அறஞ் செய விரும்பு”
“கெடுப்பது ஒழி”
“செய்வன திருந்தச் செய்”
“மூர்க்கரோடு இணங்கேல்”

போன்ற மகுட வாசகங்களின் பொருளை உணர்ந்து அவற்றைப் பின்பற்றி நடப்போமானால், ஒழுக்க வாழ்க்கைக்கு இட்டுச் செல்லும்

சமூகத்தில், பெரியவர்கள் வெறுக்கும்படியான செயல்களையோ, பேச்சுக்களையோ செய்து கெட்ட பெயர் எடுக்கக் கூடாது.

நாம் வாழுகின்ற சமுதாயத்திலோ, நாட்டிலோ ஏனையவர்களுடன் பகைமை, விரோத உணர்வு, வெறுப்பு கொள்ளாது விட்டுக் கொடுத்தும் இணங்கியும், இசைந்தும் வாழ வேண்டும். உலகத்தோடு ஒட்ட ஒழுகும் பண்பினை கொண்டிருத்தல் அவசியம். அவ்வாறு இல்லாவிட்டால் கற்ற கல்வியினால் பயன் ஏதும் இல்லாமல் போய்விடும்.

அறிவிற் சிறந்த பெரியோர்களை எமக்குத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும். ஒழுக்கம், நன்னடத்தை தொடர்பான சந்தேக விபரீதங்களை அவர்களிடம் கேட்டுத் தெளிவதன் மூலம் நம் வாழ்க்கையைப் பிறர் மெச்சும்படி சீர்செய்து கொள்ளலாம்.

அறிவுடையவர்களினாலே பழித்துரைக்கப்படுவனவாகிய இழிந்த சொற்களைப் பேசுவதும், கீழ்த்தரமான செயல்களையும் பழிபாவங்களையும் செய்வதும் ஒழுக்க வாழ்விற்கு ஒவ்வாதன. உலகம் பழித்தவற்றை ஒழித்து, போற்றுவனவற்றைப் பேணி வாழ்வதே ஒழுக்க வாழ்வு; உயர்ந்த வாழ்வு; சைவ வாழ்வு ஆகும்.

அறிவு, ஒழுக்கம், நன்னடத்தை என்பவற்றை வாழ்வில் மேற்கொள்ளாத தீயவர்களுடன் ஒருபோதும் சகவாசமோ, சிநேகிதமோ பண்ணுதல் கூடாது. அது தீமையிலும் அழிவிலும்தான் போய் முடியும். இப்படியான துட்டர்களை ஒரு காலமும் நம்பக் கூடாது. ஆசைகாட்டி மோசம் செய்பவர்கள் அவர்கள். எல்லோரையும் நம்பி நடத்தல் ஆகாது. ஆனால், எல்லோரும் நம்ப நாம் நடக்க வேண்டும். அதற்கு நேர்மையும் நீதியும் உண்மையும் எம்மிடம் இருக்க வேண்டும்.

கடமைகளை ஆற்றிய பின்னரே உரிமையைப் பெற விரும்ப வேண்டும். அதுவே நீதியாகும். இந்து சமயப் பிரமாண நூல்களுள் ஒன்றான பகவத்கீதை கடமையை உயர்ந்த தர்மமாகப் போற்றுகிறது. கடமைக்காக எத்துணை துன்பங்களையும் தாங்க வேண்டும். அது சமய வாழ்வின் ஓர் அங்கம். கடமை செய்யாமல் விடுவது, பொறுப்புக்களைத் தட்டிக் கழிப்பது அநீதியாகும்.

தாய், தந்தையர், சுற்றத்தவர் ஆகியோர் உயிரோடு இருக்கும் போது அவர்களை இகழ்வதும், துன்பப்படுத்துவதும், பின்னர் அவர்கள் இல்லாத காலத்தில் உலகோர் பாராட்டும்படி துன்பப்படுவதாகப் பாசாங்கு செய்வதும், ஆடம்பரமான தருமங்கள் செய்தலும் அறிவில்லாதவர்களின் செயல்கள். சைவம் அவற்றை ஏற்றுக் கொள்ளாது.

ஈவிரக்கமின்றிக் கொடிய மனத்தினராய், முரடனாய் இருத்தல் ஆகாது. மனித உறவைக் கெடுக்கும்.

வணக்கம், நன்றி, நல்லது, தயவுசெய்து, பாராட்டுக்கள், மன்னிக்கவும், கடவுள் காப்பாற்றுவார் போன்ற நல்ல சொற்களை நாம் உரையாடும் போது அடிக்கடி பயன்படுத்த வேண்டும். அவ்வாறு செய்தால், வேண்டாத வாதம், முரண்பாடுகள், சண்டை, சச்சரவுகளைத் தடுக்க முடியும்.

ஒழுக்கம் நிறைந்த வாழ்வே, சமய வாழ்வு. அதுவே ஆன்மிக வாழ்வு. உலக வாழ்வோடு ஆன்மிகம் இணையும் போதே, மனித வாழ்வு உயர்வும் சிறப்பும்; வளமும் வனப்பும்; தெய்வீகமும் பெறுகிறது. வாழ்வு சிவமயம் ஆகிறது.

# 31 - ஜீவன், மனம், உடல்

ஜீவன், மனம், உடல் ஆகிய மூன்றின் சேர்க்கையே மனிதன். ஜீவன், மனத்தை உணரும்படி செய்கிறது. உடலையும் இயக்குகிறது. மனம் எமது கண்களுக்குப் புலப்படாதது. அதனால் அது சூக்குமப் பொருள் எனப்படுகிறது. உடலும் அதன் பல்வேறு உறுப்புகளும் நமது கண்களுக்குப் புலப்படுபவை. அவை தூலப் பொருள் ஆகும். ஜீவன், தூய அறிவு ஆக உள்ளது. அது கடவுளின் ஒரு அம்சம் என்று நூல்கள் கூறுகின்றன. ஜீவன் அல்லது உயிர், பிறவியெடுத்து மனம், உடல் ஆகியவற்றுடன் சேர்ந்திருந் தாலும், இறைவனின் அம்சம் அல்லது பகுதி என்ற நிலையிலேயே உள்ளது.

மனிதன் அடிப்படையில் தெய்வீகமானவன். ஆன்மிக வளம் கொண்டவன். தூய அறிவினன். ஆயினும், வாழ்க்கை நடைமுறையில் தன்னை மறந்து, தனது உயர் நிலையை மறந்து, மனம் போன போக்கில் சென்றும், ஐம்புலன்களினால் ஆட்கொள்ளப்பட்டும் தன்னைப் பலவீனப் படுத்திக் கொள்கிறான். உடம்பு, மனிதனின் வாழ்க்கைப் பயணத்துக்கு ஒரு வாகனம் ஆகும். அந்த வாகனம் செவ்வையாகவும், சாரதியின் எண்ணப்படி இயங்குவதாகவும் இருந்தால் மட்டுமே பிரயாணம் பாதுகாப்பாகவும், பத்திர மாகவும் அடைய வேண்டிய இடத்தை அடையக் கூடியதாகவும் அமையும்.

மனம், மற்றும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் புலன்களும் மனிதனுக்குக் கருவி, கரணங்கள் மாத்திரமே. மனிதனின் ஆணைப்படி இவை இயங்க வேண்டுமே தவிர. இவற்றின் ஆணைக்கு மனிதன் கட்டுப்படுதல் ஆகாது. ஆனால் ஜீவன் என்ன செய்கிறது? ஜீவன், மனதுக்கும், பஞ்சப் புலன்களுக்கும் கட்டுப்பட்டு வாழ்கிறது. அதனால்தான் உலகம் தொல்லைகள் நிறைந்து காணப்படுகிறது. தொல்லைகள் நீங்கி, இன்பம் பெருகி நிலைக்க வேண்டுமாகில், ஒவ்வொரு மனிதனும், மனத்திற் கும், ஐம்புலன்களோடு கூடிய உடலுக்கும் எசமானன் ஆக வேண்டும். உடலுடனும், மனதுடனும் கொண்டுள்ள தவறான ஈடுபாட்டை நிறுத்திக் கொள்ள வேண்டும். முதன்மை கொடுக்கப்பட வேண்டியது ஆத்மாவிற்கே. வஞ்சக மனதிற்கோ, நஞ்சுப் புலன்களுக்கோ அல்ல என்பதை நாம் அறிந்து கொள்ளல் அவசியம். ஜீவன் இவற்றின் கட்டுக்குள் இருந்து விடுவிக்கப் படும் பட்சத்திலேயே உடல், மனம், உயிர் என்பன ஒழுங்குபடுத்தப்படுகின்றன.

உடலோ, மனமோ கூடாதன அல்ல. அவையும் தேவையானவையே. உடல், கரணங்கள், உலகம், அதிலுள்ள போகங்கள் யாவும் இறைவனால், உயிர்களின் மீது அவன் கொண்டுள்ள அளப்பருங் கருணையின் நிமித்தம்

வழங்கப்பட்டுள்ளன. மனிதப் பிறவியின் நோக்கம் இம்மையில் இன்பமும் மறுமையில் மோட்சமும் ஆகும். ஆனால் இறைவனால் வழங்கப்பட்ட தனு, கரண, புவன போகங்களைச் சரியான முறையில் முகாமை செய்யவும், ஆட்சி செய்யவும் இயலாமல் உலகத்து மனிதர்கள் திண்டாடுகின்றனர். அதனால் வாழ்க்கை இன்பத்தையும் பெற முடியாமல், பிறவிப் பயன்களையும் எய்த முடியாமல் மனிதர்கள் உள்ளனர்.

எனவே, உடனடியாக உலக மாந்தர்களுககுத் தேவைப்படுவன உடலை ஒழுங்குபடுத்துவதும், புலன்களைக் கட்டுப்படுத்துவதும், மனத்தைப் பக்குவப்படுத்துவதும் ஆகும்.

உடல் ஆரோக்கியமாக, நலத்துடன் இருந்தால் தான், உலகியல் சம்பந்தப்பட்டதோ, ஆன்மிகம் சம்பந்தப்பட்டதோ, எதுவாயிருப்பினும், எந்தப் பயனுள்ள செயலும் நடைபெறும்.

அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் என்கின்ற மனித வாழ்க்கையின் நான்கு குறிக்கோள்களையும் அடையப் பெறுவதற்கு உடலை ஆரோக்கிய நிலையில் வைத்திருத்தல் அவசியம்.

உடல் ஆரோக்கியம் செவ்வையாக இருக்க வேண்டுமானால், பஞ்சப் புலன்களும் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரப்பட வேண்டும். அதேவேளை மன ஆரோக்கியமும் ஓம்பப்படுதல் அவசியம். மனம் தூய்மையாக இருத்தல், மன ஆரோக்கியத்திற்கு முன் நிபந்தனை ஆகும். மனம் நலமாக இருத்தல் என்பது மனிதனின் செயல்களில் பிரதிபலிக்கும். அந்நிலையில் மனிதனின் எல்லாச் செயல்களும் நற்செயல்களாகவே பரிணமிக்கும்.

நம்முடைய மனம் சுத்தமாகவும், எண்ணங்கள் தூய்மையாகவும் இருக்க வேண்டுமானால், நாம் உண்ணு கின்ற உணவும் சாத்வீக குணங் களைத் தரக்கூடியதாக இருக்க வேண்டும். அதுவே சைவ உணவாகும். இவை அனைத்திற்கும் மேலாக, மனம் வெளுப்பதற்கு ஒரேயொரு மார்க்கம் உண்டு. சித்தத்தைச் சிவன்பால் வைப்பதே அந்த மார்க்கம் ஆகும். இறைவனோடு இணைந்திருக்கும் போது, மனம் அழுக்குமல்ல. உடல் இழுக்குமல்ல. பஞ்சப் புலன்கள் வஞ்சனை புரிபவையும் அல்ல என்பதை உணர்ந்து கொண்டு அவற்றை நன்றாக ஓம்பி நல்வாழ்வு வாழ்வோமாக.

“உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்(று)
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே”

என்பது திருமூலர் திருவாக்கு. (திருமந்திரம் 725)

# 32 – திருவருள் யாருக்குக் கிட்டும்

சைவம், இறைவனை அன்பு வடிவமாகக் காண்கின்ற அதே வேளை, அறிவு வடிவினனாகவும் காண்கின்றது. ஞானத்தின் திருவுருவாக இறைவன் உள்ளான். எல்லாம் அறிபவன். அறிந்தவன் இறைவன்.

"கற்றதனா லாய பயனென் கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்" என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

தூய பேரறிவு வடிவாக விளங்கும் இறைவனின் கமலப் பாதங்களை மனத்தில் இருத்தி வணங்காமல் இருப்பவர்கள், எத்துணை பெரிய கல்வியைக் கற்றும் அதனால் அவர்களுக்கு ஒரு பயனும் இல்லை. அவர்கள் கற்ற கல்வி வீணாகி, விரயமாகிப் போய்விடுகிறது. கற்றும் கல்லாதவர்கள் ஆகின்றனர். கல்விப் பயனை அவர்கள் அடையவில்லை. இத்தகையோரின் நெஞ்சில் ஈசன் நிற்கமாட்டார். ஈசன் இல்லாத நெஞ்சம் வஞ்சம் நிறைந்தது. வன்மை மிகுந்தது. ஈரம் இல்லாதது. வரட்சியானது. அத்தகைய நெஞ்சங்களின் எண்ணங்கள் தீமை பயப்பவை. எனவே, கல்வி கற்றவர் யார், என்றால், இறைவனை நெஞ்சில் இருத்தி வழிபடுபவர்களே கல்வி கற்றவர் என்று கூறலாம்.

எந்தையாகிய ஈசன் திருவடிகளை மனம், மொழி, மெய்யினால் பூசிக்கும் பேறு பெற்றவர்களே கல்வியால் பயன் அடைந்தவர்கள். கடவுளைப் பக்தி செய்து பூசிக்கக் கல்வியே துணையாகின்றது. கல்வியறிவு இல்லாதவன் முருக்கம்பூவுக்குச் சமன் என்கிறார் நாவலர் பெருமான்.

அத்தகைய கல்வியை இளமையில், என்ன கஷ்டப்பட்டும் கற்க வேண்டும். "கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்." "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனி" ஈசன். இளமையில் கல்லாதவர் சிறுமையடைவர். கற்றவர்களும் கடவுளைப் பத்திசெய்து தொழாவிட்டால் சிறுமையெய்துவர்.

தற்காலக் கல்வி, ஆன்மிகம் சாராத கல்வி. அது உலகியல் நோக்குடையது. பொருளும், புகழும், பதவியும் பட்டங்களும் சம்பாதிக்க அக்கல்வி உதவுகிறது. அதனால், மானுடத்தை, மனிதத்தை, மனிதர்மத்தை, சுருங்கச் சொன்னால் மனிதப் பண்புகளை மனிதன் பெற்றுக் கொள்ள உதவுவதாக இல்லை. அதனால் இன்றைய சமூகங்களில் ஊழல்களும், சீர்கேடுகளும், அநீதிகளும் மலிந்துள்ளன.

கடவுள்தான் நமக்கு அடைக்கலம். அவனின்றி ஓர் அணுவும்

அசையாது. கடவுளாலேதான் உலகம் நடைபெறுகிறது. கடவுள் சர்வ வல்லமை உடையவர். அவரே நமக்குத் தலைவன். கடவுளின் திருவருளைப் பெற்றாலே எமக்கு உய்வுண்டு. இறுதியில் முத்தியின்பமும் கிடைக்கும்.

சத்தியத்தையும், அன்பையும், பொறுமையையும் நல்ல மனிதப் பண்புகளையும் வாழ்வில் கைக்கொண்டு ஒழுகுபவர்களுக்கே கடவுளின் திருவருள் நிச்சயமாகக் கிடைக்கும். கடவுளின் திருவருளை எங்கேயும் பணம் கொடுத்து விலைக்கு வாங்கிவிட இயலாது. அதிகாரத்தினால் அதட்டிப் பெற்றுக் கொள்ளவும் முடியாது. இத்தகைய உண்மைகளை எமக்கு எடுத்து விளம்பும் கல்வியே பயனுள்ள கல்வி. அக்கல்வியைக் கற்பதால், மானுடப் பண்புகள், மனித விழுமியங்கள், மனிதத் தன்மைகள், தெய்விக இயல்புகள் பற்றி அறியவும் உணரவும் முடிகின்றது. அவற்றை அறிந்து வாழ்வில் மேற்கொண்டால் சமுதாயத்திலுள்ள தொல்லைகள், துயரங்கள், ஊழல்கள், வன்முறைகள் நீங்கும். சாந்தியும் சமாதானமும் நிலவும். இன்றைய தேவையும் இதுவே.

அன்புள்ளவனுக்கு, ஆன்மிக அறிவு நிறைந்தவனுக்கு அறம் உள்ளவனுக்கு திருவருள் கிட்டும். திருவருள் கிடைக்கப் பெற்றவர்கள் இன்பமாக வாழ்வர். அவர்கள் எண்ணிய எண்ணங்கள் எல்லாம் கைகூடும். நல்லெண்ணங்களை மாத்திரம் எண்ணவும், நற்செயல்களை மாத்திரம் ஆற்றவும் தான் அவர்களுக்கு முடியும்.

களவு செய்யாமலும், பொய் பேசாமலும், மதுபானம் அருந்தாமலும், பிறன்மனை நோக்காமலும், சூதாடாமலும், தாய், தந்தை, பெரியோர்களை நிந்திக்காமலும், கெட்டவர்களுடன் நட்புக் கொள்ளாமலும், பிறருக்கு எவ்வகையிலும் தொல்லைகள் தராமலும், பிறர் வருந்த வன்சொற் பேசாமலும், பிற உயிர்களை கொல்லாமலும், புலால் உண்ணாமலும் வாழ்பவர்கள் கடவுளின் திருவருளைப் பெற்றவர்கள் ஆவர்.

பிறர்க்கு வரும் கல்வி, செல்வம் மற்றும் இன்பங்களைக் கண்டு மனம் புழுங்காது, பொறாமை கொள்ளாது மகிழ்தல் செயற்கரிய செயல். அதற்குத் திருவருள் வேண்டும்.

# 33 - செயல் தூய்மை

நாம் செய்கின்ற செயல்கள் அனைத்தும் இறைவழிபாடாகக் கருதி அவற்றைத் தூய்மையாகச் செய்யவேண்டும். புதிய மலர்களைப் பறித்து, அவை வாடிப் போவதற்குமுன், அவற்றை இறைவனுக்குச் சார்த்துகிறோம். அவ்வாறே, எமது செயல்களையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதானால், அவை மாசுபடாமல் தூய்மையாக இருத்தல் அவசியம்.

செயல் தூய்மையாக இருப்பது எப்போது எனில், அச்செயல் ஆனது சேவை, அன்பு, நல்லுணர்வு, பரோபகாரம் என்பவற்றை உள்ளடக்கியிருக்கும்போது எனலாம். தூய்மையான செயலினால் எல்லோருக்குமே நன்மை கிட்டுகிறது. சொல்லும் செயலும் சத்தியத்தின் அடிப்படையில் நிகழ வேண்டும் என்பது சைவநீதி

சுயநலம் மிக்க போக்குகளையும், மனப்பாங்குகளையும் வளர்க்கின்ற மனிதர்களே இன்று நிறையக் காணப்படுகின்றனர். அவர்களிடமிருந்து சொல் தூய்மையையோ, செயல் தூய்மையையோ, சத்தியத்தையோ எதிர்பார்க்க முடியாமலுள்ளது. அவர்கள் முதலில் வெற்றிகளைப் பெறுவது போலக் காட்சியளிப்பர். ஆனால் அத்தகைய வெற்றிகள் தொடர்ந்து இருக்கமாட்டா. "சத்தியமேவ ஜெயதே" என்னும் மகுடவாசகத்தை உணர்ந்து கொண்டால், தூய்மையற்ற வழியில் கிடைக்கும் வெற்றிகள் உண்மையான வெற்றிகள் அல்ல. அவை வெறுந் தோற்றமே என்பது தெரியவரும். எப்போதும் உண்மைதான் வெல்லும். உண்மைக்கு அழிவில்லை. உண்தைான் பரம்பொருள். பரம்பொருள்தான் உண்மை. அப்படியாயின் வெற்றி உண்மையின் பக்கம்தானே இருக்கும். எனவே உண்மையைப் புறக்கணித்தவர்கள் இறைவனைப் புறக்கணித்தவர்கள் ஆகின்றனர்.

இறைவனை வழிபாடு செய்வோர், தம் செயல்கள் அனைத்தையும் இறைவழிபாடாக் கருதி அவற்றை ஆற்றவேண்டும். இவை ஒன்றும் என் செயல் அல்ல. யாவும் உன் செயலே என்று இறைவனிடம் ஒப்படைத்து விடவேண்டும். அவ்வாறு செய்தால் எல்லாவற்றிற்கும் அவனே பொறுப்பாவான். அவ்வாறு நாம் செய்யாவிடில், சகல வல்லமைகளும் பொருந்திய இறைவனை நாம் அலட்சியமும் அசட்டையும் செய்தவர்கள் ஆவோம். அப்பொழுது மனிதனிடம் தோன்றுபவைதான் அகந்தை, மமதை, செருக்கு, கர்வம், இறுமாப்பு என்பவை ஆகும். மனிதன் மனிதனாவது எப்போது? தெய்வீக நிலைக்கு உயர்த்தப்படுவது எப்போது? அகந்தையும், மமதையும் அழியும் போதுதான் இத்தகைய உயர்நிலையினை மனிதர் அடைய முடியும்.

சத்தியம், இரக்கம், அன்பு, பொறுமை, சகிப்புத் தன்மை, நன்றியுடைமை எனும் நற்பண்புகள், அகந்தையும், சுயநலப் போக்கும் அழிந்த நிலையில்தான் மனிதரிடம் இடம் பெறுகின்றன. "நான்" எனும் அகங்காரம் மனிதரை ஆட்சி செய்யும் போது, ஆன்ம ஜோதி மங்குகிறது. ஆன்ம ஒளி மங்கினால், இருள் சூழ்ந்துவிடும். தொல்லைகளும் சஞ்சலங்களும் அதிகரித்து விடுகின்றன. எனவே மனிதரிடம் குடிகொண்டுள்ள அகங்காரம் அழிக்கப்படும்போதுதான் எல்லாத் தொல்லைகளுக்கும் துயர்களுக்கும் ஒரு முடிவு ஏற்படுகிறது. சஞ்சலங்கள் அகன்று விடுகின்றன. வாழ்வில் ஆனந்தம் மலர்ச்சி பெறுகிறது. அகங்காரம், சுயநலத்திற்கு ஏதுவாக, அச்சுயநலத்திரை இறை ஒளியை மறைக்கிறது. இறைவன் எங்களுக்கு மிக அருகில் இருக்கிறான். அவனை நம்மிடமிருந்து பிரித்து, நாங்கள் காணாதபடி செய்வது, எம்மிடமுள்ள சுயநலமும் அகங்காரமும் தான்.

சிலர் இருக்கிறார்கள் அவர்களுக்கு எதைச் சொன்னாலும், உடனே அவர்கள், "எல்லாம் எனக்குத் தெரியும்" என்பார்கள். இத்தகைய இறுமாப்பு, "நான்" எனும் அகந்தை உணர்வினால் உருவாகிறது. இந்த உணர்வு இருக்கும்வரை மனிதருக்கு உய்வு ஏற்படாது. வாழ்வில் கவலைகளை ஒழித்து ஆனந்தத்தை அடைய விரும்புபவர்கள், "எனக்கு எல்லாம் தெரியும்" என்ற உணர்வை விலக்கிவிட வேண்டும்.

மனிதன் அமைதியை, நிம்மதியை, சாந்தியை விரும்புகிறான். அவற்றை அடைய முயற்சிக்கிறான். இந்த விருப்பமும், முயற்சியும் நேர்மையும் விசுவாசமும் கொண்டவையாயின், முதலில் இறைபக்தி வேண்டும். தொடர்ந்து அர்த்தமற்ற வாதங்கள், தகராறுகள், விளம்பரங்கள், பகட்டுக் கள், அதிகாரங்கள், கொடுமைகள் என்பவற்றிலிருந்து விலகியிருக்க வேண்டும். அந்த நிலையை அடைவதற்கு ஆண்டவன் அருள்வேண்டும். அத்தோடு சத்தியம், நல்லொழுக்கம், அன்பு, நீதி என்பவற்றைப் பின்பற்றவும் வேண்டும்.

எவனொருவன், நம் செயல்களையெல்லாம் இறைவன் பார்க்கிறார், கேட்கிறார், அறிந்து கொள்கிறார் என்பதில் பூரண நம்பிக்கை கொள்கிறானோ அவன் பொய்யையும் மெய்யையும் பகுத்தறிந்து மெய்யையே பேசுவான். மெய்யானவற்றையே செய்வான். அவன் எதனைச் செய்யும் போதும் நல்லது கெட்டதைப் பிரித்தறிந்து நல்லதை மட்டுமே செய்வான்.

எல்லாம் வல்ல இறைவனின் நினைவு எம்மிடம் நீங்காது நிலைபெற வேண்டும். அப்போதுதான் நல்லவற்றைப் பேசுவோம். நல்லவற்றைச் செய்வோம். ஆனந்தம் பெறுவோம். உலகில் அமைதி நிலவும்.

# 34 - சித்திரைப் புத்தாண்டில் பேணப்படும் பாரம்பரியங்கள்

பண்டிகைகள், விழாக்கள், கொண்டாட்டங்கள் என்பன மனித வாழ்க்கைக்குச் சுவையும், உறுதியும், வளமும், வனப்பும், அர்த்தமும், ஆன்மிகமும் அளித்து வருகின்றன. அவற்றில் பற்று வைப்பதும் பங்கு கொள்வதும் அறிவுடைமை ஆகும். மனிதர்கள் சமூக, கலாசார, பண்பாட்டு உணர்வு பெற்று செம்மையான வாழ்வினை, நல்ல வண்ணம் வாழ்வதற்கு அவை பெரிதும் உறுதுணையாக அமைகின்றன.

## பண்டிகைகள் மூட நம்பிக்கைகள் அல்ல

பண்டிகைகள், விழாக்கள் என்பன பெரும்பாலும் சமயஞ் சார்ந்தவை. அவற்றின் உள்ளார்ந்த அர்த்தங்களை விளங்கிக் கொள்ளாதோர் அவற்றை மூடநம்பிக்கைகள் எனக் கூறித் தள்ளி வைக்கின்றனர். கேலி கிண்டல்களும் செய்கின்றனர். நாம் என்ன பெரிய அறிவாளிகளா? நம்மால் விளங்கிக் கொள்ள முடியவில்லையென்றால், அவற்றை மூடநம்பிக்கைகள் என்று சொல்லி விடுவதா?

மூட நம்பிக்கைகள் என்று அவற்றைக் கொள்வதன் மூலம் நம் முன்னோர்கள் நமக்களித்த அரும்பெருஞ் செல்வங்களை உதறித்தள்ளி உதாசீனஞ் செய்தவர்கள் ஆவோம். பண்டிகைகள், விழாக்கள், பாரம் பரியங்கள் யாவும் எமது பண்பாடு, கலாசாரத்தைத் துலக்கி நிற்பன. நாம் அதையிட்டுப் பெருமை கொள்ளவேண்டுமே தவிர, அவற்றைப் புறக்கணித்துச் சிறுமையை அடையக் கூடாது.

## பண்டிகைகள் வாழ்க்கையோடிணைந்தவை

பண்டிகைகள், விழாக்கள் என்பன காலம் காலமாக மக்கள் வாழ்க்கை யோடு பின்னிப் பிணைந்து விட்டவை. அவற்றிலிருந்து ஒதுங்கிக் கொள்வதால் நாம் நாமாக வாழ முடியாத நிலை ஏற்பட்டுவிடும். தனித்துவத்தை இழந்து தனித்துப் போவோம் அல்லது வேற்றுக் கலாசாரம் எம்மை சுவீகரித்துக் கொள்ளும் நிலை ஏற்பட்டு விடும்.

பண்டிக்கைகள், பாரம்பரியங்கள், விழாக்கள் என்பன மக்கள் வாழுகின்ற பௌதிகச் சூழல், பருவகாலங்கள், செய்யுந் தொழில்கள், சமூக பொருளாதாரப் பின்புலம் ஆகியவற்றுடன் இணைந்தும், இசைந்தும், பொருந்தியுமே

வளர்ந்து வருகின்றன. அவற்றில், காலத்தின் தேவை, கால உணர்வுக்கேற்ப சிற்சில மாற்றங்கள் நிகழ்ந்திருக்கலாம். ஒவ்வாதன கழிந்து போயிருக்கலாம். புதியன புகுந்துமிருக்கலாம். எனினும் பண்டிகைகளின் நீண்ட காலத் தொடர்ச்சிக்கும், நிலைபேற்றிற்கும், அவை மக்களை ஈர்த்துக் கொண்டமைக்கும், மக்கள் வாழ்க்கையோடு பிரிக்கமுடியாத அளவிற்கு அவை கலந்து விட்டமையே காரணமாகும்.

மக்கட் கூட்டத்தினரின் கலரசார, பண்பாட்டுத் தனித்துவத்தினையும், சிறப்பினையும் இனங்காட்டி நிற்பதும் நம் முன்னோர் அளித்த அந்த அருஞ் செல்வங்களே. எனவே அவற்றை அறிந்து கொள்வதும், அனுசரிப்பதும், பேணிப் பாதுகாத்து அடுத்த சந்ததியினருக்குக் கையளிப்பதும் நமது கடமையாகும்.

## சித்திரைப் புத்தாண்டு

உலகின் மிகத் தொன்மையான இந்து கலாசாரம், காலம் பற்றி மிக நுணுகி ஆராய்ந்து அரிய முடிவுகளை எடுத்து நமக்கு வழங்கியுள்ளது. காலத்திற்கு முக்கியத்துவம் அளித்துள்ளது. காலத்தின் அருமை பெருமைகளை உணர்த்தியுள்ளது. காலம் போனால் போனதுதான். மறுமுறை மீண்டும் வராது. எனவே காலம் பொன்னானது. காலச்சக்கரம் உருண்டு கொண்டேயிருக்கும். காலத்திற்கும் மனித வாழ்விற்கும் மிக நெருக்கமான தொடர்பு உண்டு. பிறப்பு, இளமை, முதுமை, மூப்பு, இறப்பு என்பன காலத்தால் நிர்ணயிக்கப்படுகின்றன. காலம் என்பது தொழில்கள் செய்வதற்கும் கருத்தில் கொள்ளப்பட வேண்டிய முக்கியத்துவத்தைப் பெற்றது மனிதனுக்கு இயலாத காரியங்களில் ஒன்று காலத்தை மாற்றுவது ஆகும். அதனால் காலமாற்றத்தோடு ஒத்துப் போவதைத் தவிர வேறுவழியில்லை.

காலத்தோடு முரண்படும் போதெல்லாம், வெற்றி மனிதன் பக்கம் இல்லை. அவலங்களும் துன்பங்களும், அழிவுகளும்தான் அப்போது அவன் சந்தித்தவை. காலத்தை வெல்ல முடியாது என்பதை உணர்ந்த மனிதன் காலத்திற்கு அடிபணிந்தான். காலம் வணக்கத்திற்குரியதாயிற்று.

காலத்திற்கும் சகுணமாக பிரத்தியட்சமாகத் தெரிகின்ற சூரியனுக்கும் உள்ள தொடர்பு அறியப்பட்டதும், சூரியனே காலத்தை நிர்ணயிக்கின்றது என்று உணர்ந்தனர். பகல், இரவு. கோடை, மாரி மற்றும் வெப்ப தட்பங்கள் ஏற்படுவதற்குச் சூரியனே சூத்திரதாரி என உணரப்பட்டது. சூரியன் வழிபாட்டிற்கு உரியவனானான்.

சூரியனை முன்வைத்து ஆண்டுகள், மாதங்கள், நாள்கள், நாழிகைகள்,

விநாடிகள், தற்பரைகள் எனக் காலம் பகுக்கப்பட்டது.

சௌர வருஷம், சௌர மாதம் என்பன சூரியனோடு சம்பந்தப்பட்டவை. வருஷங்கள் பிரபவ முதல் அக்ஷய வரை அறுபது ஆகும். மாதங்கள் மேடம் முதல் மீனம் வரை பன்னிரண்டு ஆகும். அவற்றை முறையே சித்திரை முதல் பங்குனி வரையிலான மாதங்கள் எனக் குறிப்பிடுகின்றனர்.

சூரியன் மேடராசியில் பிரவேசிப்பது முதல் மீன ராசியை விட்டு நீங்கும் வரையும் உள்ள காலப் பகுதி ஒரு வருஷம் ஆகும். ஒரு வருஷம் பன்னிரண்டு (கூறுகளாக) மாதங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதலாவது காலக் கூறு மேடராசி அல்லது சித்திரை மாதம் என்பர்.

சூரியன், சித்திரைமாதம் முதல் நாளன்று, மேடராசியில் பிரவேசிக்கிறார். அதனை மேட சங்கிராந்தி என்கின்றனர். இந்துக்கள் அத்தினத்தை வருடப்பிறப்புத் தினமாகக் கொண்டாடுகின்றனர்.

சித்திரைப் புத்தாண்டுத் தினம், இந்துக்கள் காலத்தை நுணுகி ஆராய்ந்து எடுத்த முடிவின் பேறாக ஏற்படுத்தப்பட்ட பண்டிகை ஆகும்.

இந்துமக்கள், சித்தரைப் புத்தாண்டுத் தினத்தை சமய ஆசாரப்படியும், பழைய பாரம்பரியங்கள், மரபுகள் ஆகியவற்றைப் பேணியும், சோதிட சம்பிரதாயங்களை அனுசரித்தும், சமூக உணர்வுகளை ஓம்பியும் கொண்டாடி வருகின்றனர்.

## சித்திரைப் புத்தாண்டும் சோதிடக் கலையும்

ஆயகலைகள் அறுபத்து நான்கினுள் சோதிடக்கலையும் ஒன்று. இந்து மக்களின் வாழ்க்கையில் சோதிடத்தின் செல்வாக்கு மிக அதிகம். காலத்தையும் நேரத்தையும் கணித்து மக்களுக்கு உதவுவது சோதிடம். சோதிடத்தை கேட்டு அதன் ஆலோசனைப்படியே எல்லாக் கருமங்களிலும் காரியங்களிலும் ஈடுபாடு கொள்ளும் வழக்கம் இந்துக்களிடையே நெடுங்காலமாக இருந்து வருகிறது.

சித்திரைப் புத்தாண்டு பிறக்கும் நேரத்தை முன்கூட்டியே சோதிடம் கணித்துக் கூறி விடுகின்றது. குறித்த நேரத்தில் புத்தாண்டை வரவேற்க இல்லங்கள் தோறும் குத்துவிளக்கேற்றி நிறைகுடம் வைத்து, மகர தோரணங்களினால் அலங்கரித்து இந்துக்கள் காத்திருப்பார்கள். அந்த நேரத்தில் ஆலயங்களில் மணிகள் அடிக்கப்படும்.

ஒவ்வோர் ஆண்டிற்கும் வெவ்வேறு பெயர்கள் உண்டு. அப்பெயர்

களைச் சோதிடம்தான் தந்துள்ளது. ஒரு சுற்றில் அறுபது ஆண்டுகள் உண்டு. இந்தப் புத்தாண்டு பிறந்த நேரத்தைக் கொண்டு கிரகநிலையை அமைத்து ஆண்டிற்குரிய பலாபலன்களைச் சோதிடம் கூறுகிறது. பலன்கள் நல்லனவாயும் உண்டு. தீயவையாயும் உண்டு.

புதுவருடம் பிறக்கும் நேரத்திற்கு முன்னும் பின்னும் குறிப்பிட்ட ஒரு கால அளவு நேரம் விஷு புண்ணியகாலம் எனப்படும். இப்புண்ணிய காலத்தில் மருத்துநீர் சிரசில் தேய்த்து ஸ்நானம் செய்து கொள்வர். புனித தீர்த்தங்களில் நீராடுவதால் பவவினைகள் அழியும்.

குறிப்பிட்ட சில நட்சத்திரங்களில் பிறந்தவர்களுக்கு சங்கிரம தோஷங்கள் உண்டு. அவற்றையும் சோதிடமே கணித்துச் சொல்கின்றது. தோஷமுள்ளவர்கள் தவறாது மருத்துநீர் தேய்த்து, புனித நீராடி, கடவுளை வழிபாடு செய்து, தானதருமங்கள் புரிந்து, சங்கிரம தோஷத்தை நிவிர்த்தி செய்து கொள்வர்.

வருடம் பிறந்த பின்னர் செய்யப்படும் கருமங்கள் யாவும், அவை பழைய கருமங்களின் தொடர்ச்சியாக இருப்பினும் கூட, புதுக் கருமங்களாகவே கருதப்பட்டு, நாள், நேரம், முகூர்த்தம் பார்த்து சுபவேளைகளிலேயே ஆரம்பிப்பது வழக்கம். பஞ்சாங்கம் சுபநேரங்களை அறியத்தருகிறது.

பஞ்சாங்கம் ஐந்து அங்கங்களைக் கொண்டுள்ளது. திதி, நாள், நட்சத்திரம், யோகம், கரணம் என்பனவே அந்த ஐந்து அங்கங்களுமாகும். இவையாவும் நல்ல நிலையில் இருக்கும் வேளையைச் சுபநேரம் என்கின்றனர்.

## கைவிசேஷம்

கைவிசேஷம், புதுவருடத்தில் இடம் பெறும் ஒரு முக்கிய நிகழ்ச்சி. பணம் கைமாறல் என்பது இதன் பொருள். வருடம் பிறந்த நேரம் தொடக்கம் கைவிசேஷம் பெற்றுக் கொள்ளும் சுபவேளை வரை காசு, பணத்தைப் பரிமாற்றம் செய்வதில்லை. கையினால் தொடவும் மாட்டார்கள். கைவிசேஷத்திற்குரிய நல்ல நேரத்தைப் பஞ்சாங்கத்திலிருந்து அறிந்து கொள்வர்.

பொதுவாகக் குடும்பத்தலைவன், தலைவியிடமிருந்தே கைவிசேஷம் பெறுவது வழக்கம். வெற்றிலையில் சிறிது நெல்தானியம், மலர்கள், பாக்கு, பழம் என்பனவற்றை வைத்து, அவற்றின் மீது பணம் வைத்துக் கடவுளை நினைந்து, புதிய ஆண்டில் தனலாபம், தானிய லாபம், பொருள் லாபம் அனைத்தும் நிறையக் கிடைக்க வேண்டுமென மனதாரப் பிரார்த்தித்து, குடும்பத் தலைவன் கைவிசேஷம் வாங்கிக் கொண்ட பின்னர்தான் பணம் கொடுக்கல் வாங்கல் செய்யப்படும்.

கைவிசேஷத்தை பெரியார்கள், முதலாளிமார்கள், கைராசிக்காரர் எனக் கருதப்படுபவர்கள் ஆகியோரிடமிருந்தும் பெற்றுக் கொள்வர்.

## புதுக் கருமங்களுக்கு நாள் பார்த்தல்

விருந்து உண்ணல் என்பது உறவினர், சுற்றத்தவர், நண்பர்கள் ஆகியோரை ஒரு நல்ல நாளில் வீட்டுக்கு அழைத்து விருந்து வைத்தல். தாம் போய் உறவினர் முதலியோர் வீடுகளில் வருடம் பிறந்த பின் முதன்முதலாக உணவு உண்ணல் ஆகிய இரண்டையும் குறிக்கும். விருந்துக்கும் கடுமையான நாள், நேரம், திதி, யோகம், நட்சத்திரம் எல்லாம் பார்ப்பார்கள். வியாழன், செவ்வாய், ஞாயிறு ஆகிய நாட்களைத் தவிர்த்துக் கொள்வர். கள்ள வியாழன் கழுத்தை அறுக்கும் என்ற நம்பிக்கை எல்லோரிடமும் உண்டு. அட்டமி, நவமி, அமாவாசை போன்ற கனத்த நாள்களிலும், மரண யோகம், கரிநாள், இராகுகாலம் உள்ள நேரங்களிலும் முதன்முதலாக விருந்துண்ணமாட்டார்கள். பானங்கள் தன்னிலும் அருந்தமாட்டார்கள். உறவினர், நண்பர்கள் வீடுகளுக்குள் செல்லவும் மாட்டார்கள். வருஷம் பிறந்து முன்னம் முன்னம் ஒவ்வாத நாளில் ஒருவர் வீட்டுக்குச் சென்றால், அங்கு உணவு உண்டால் நிச்சயம் அந்த ஆண்டில் ஏதோ விதத்தில் அவரோடு பகைக்க நேரிடும் என்னும் நம்பிக்கை ஆண்டாண்டு காலமாக மக்களிடையே இருந்து வருகிறது. இதற்குச் சான்றாகப் பல உண்மைச் சம்பவங்களை பெரியவர்கள் எடுத்துக் கூறுவர்.

உறவுக்குப் பங்கம் ஏற்பட்டுப் பிரிந்தவர்களைக் கூட்டி வைக்கும் காலமாகப் புத்தாண்டுப் பண்டிகைக் காலம் விளங்குகின்றது. ஊர்ப் பெரியவர்கள், குடும்பப் பெரியவர்கள் முன்னின்று பிரிந்தவர்களைச் சேர்த்து வைப்பர். உறவு பலப்படுத்தல், உறவைப் புதுப்பித்தல், பகைமையைப் போக்கி புதிய உறவை ஏற்படுத்துதல் என்பவையெல்லாம் பண்டிகைக் கால நிகழ்வுகள். இந்த வகையில் சமூக முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் புதுவருடப் பண்டிகை விளங்குகிறது.

மற்றெந்தக் காலங்களிலாவது உறவினர், சுற்றத்தினர், அயலவர், சம்பந்திகள் வீடுகளுக்குச் சென்று அளவளாவி, குசலம் விசாரித்து வராவிட்டாலும் கூட, புத்தாண்டுப் பண்டிகைக் காலத்தில் அத்தகையவர்கள் வீட்டிற்குச் சென்று அவர்களைத் தரிசித்து, விருந்துண்டு வருவதை ஒரு கண்டிப்பான கடப்பாடாகப் பேணிவருபவர்கள் இந்துக்கள்.

குரு ராஜ பிரபு தரிசனம். மாதா, பிதா, ஆசிரியர் தெய்வதரிசனம் என்பனவும் புத்தாண்டில் செய்யப்பட வேண்டியவை.

ஏர்மங்கலம், ஒரு சடங்காகவே நிகழ்த்துவர். புத்தாண்டில் முதன் முதலாக வயல், தோட்டங்களில் பிரவேசித்து, மாடுகளை ஏரில் பூட்டி நிலத்தை உழுதல் என்னும் கருமத்தை ஏர்மங்கலம் என்பர். அவ்வாறே வருடம் பிறந்த பின்னர் ஒரு சுபவேளையிலேயே, வியாபாரம் செய்தல், புதுக்கணக்குப் பதிதல், கொடுக்கல் வாங்கல் செய்தல் என்பனவற்றை நிகழ்த்தும் வழக்கம் இருந்து வருகிறது.

கமச்செய்கை தோட்டச் செய்கையிலோ, வியாபாரத்திலோ, மேற் கொள்ளப்படும் வேறெந்தத் தொழிலிலேயோ இந்த ஆண்டில் ஏற்படுகின்ற இலாப நட்டம், வரவு செலவு, பலிதம் பலிதமின்மை என்பன யாவும் புதுவருடம் பிறந்த பின்னர் முதன் முதலாக அத்தொழில்கள் தொடங்கப்பட்ட நேர, காலத்தைப் பொறுத்தே அதற்கேற்ப நிகழ்கின்றன என்பது இந்துக் களின் நம்பிக்கை. அதனாலேதான் தொழில்களைச் சுபவேளையில் தொடங் குவதும், கிரியைகள் சடங்குகள் என்பவற்றை சமயரீதியாக மேற்கொள்வதும், தொழில் பலிதம், காரியசித்தி, வருவாய் மிகுதி என்பனவற்றிற்கு இன்றிமை யாதனவென்று இந்து மக்கள் நம்பிக்கை கொள்கிறார்கள். நம்பினார் கெடுவதில்லை என்பதற்குப் பல சான்றாதாரங்களைக் காட்டுவார்கள். அவற்றில் நம்பிக்கையற்றவர்கள், நாள் நட்சத்திரம், சுபவேளை என்பவற்றைப் பாராமல் தன்னிச்சையாகத் தொழில்களைத் தொடங்கி, கருமங்களைப் புரிந்துபட்ட கஷ்ட நஷ்டங்களையெல்லாம் கதை கதையாகக் கூறுவார்கள்.

## புதுப்பொலிவு

புத்தாண்டுத் தினத்தில் வாழ்க்கையில் ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பிப்பதாக எண்ணு கின்றார்கள். பழைய கோபதாபங்கள், பகைமைகள், வெறுப்புணர்வுகள் என்பவற்றை பழைய ஆண்டோடு விட்டுவிடுவார்கள். புதிய ஆண்டு மலர்ந்ததுடன், நட்பு, அன்பு, நல்லெண்ணம், நல்லுறவு, நல்லிணக்கம் என்பனவும் தம் உறவினர், சுற்றத்தவரிடையே மலர்ச்சி பெற வேண்டும் என்பது அவர்களின் விருப்பம். புத்தாண்டில் பீடைகள், துன்பங்கள், துயர்கள், பகைமைகள் யாவும் ஒழிக்கப்பட்டுவிடும் என்னும் நம்பிக்கையும் ஒளி விடும். மனிதர்கள் தனித்து வாழ்வதில்லை. சேர்ந்து சமூகமாக வாழ்பவர்கள். எனவே சமூக உறவு, சமூகநீதி, சமூக உறுதி என்பவற்றைப் பேணவும் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன கடன்பட்டிருந்தால், கூட பழைய ஆண்டு முடிவிற்குள் தீர்த்து விட்டுப் புத்தாண்டுத் தினத்தில் கலக்கமின்றிச் சுதந்திரமாக இருப்பர். கூடாத பழக்கங்களையும் விட்டுவிடுகின்றனர். புத்தாண்டில் புனிதம் பேணிப் பொலிவு பெறுகின்றனர்.

புத்தாண்டுக் காலங்களில் பல்வேறு சுதேச விளையாட்டுக்களில் ஈடுபடுவது வழக்கம். கூத்துக்கள், ஆடல் பாடல்கள், கும்மி மற்றும் கலை

நிகழ்ச்சிகளிலும் மக்கள் ஈடுபடுவர். தொழில் நிமித்தமோ, வேறு காரணங்களை முன்னிட்டோ, பிற இடங்களில் சென்று இருப்பவர்களும் கண்டிப்பாக சொந்த ஊருக்குப் புத்தாண்டுக் காலத்தில் திரும்பி விடுவார்கள். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? ஒரே கொண்டாட்டமும் குதூகலமும் தான். ஊரில் உள்ளவர்களும் அறுவடை முடிந்து ஓய்வாக இருப்பர். புத்தாண்டுக் காலம், குடும்பத்தினர் ஒன்று கூடலுக்கும் உறவின ருடன் ஒன்று சேர்தலுக்கும் உரிய காலமாகும். திருமணமாகியுள்ளவர் களுக்கு முதல் புத்தாண்டில் பல்வேறு உபசரிப்புகள் நடைபெறும்.

போர்த்தேங்காய் அடித்தலில் இளைஞர்கள் ஆர்வம் காட்டுவர். இரண்டு குழுவினருக்கிடையே போட்டியாகவும் இதனை நடத்துவர். ஊஞ்சல் கட்டி ஆடும் வழக்கமும் உண்டு.

புத்தாண்டுக்கால விளையாட்டுக்கள், கலைகலாசார நிகழ்வுகள், சமயச் செயற்பாடுகள், விருந்தோம்பல், ஒன்று கூடல்கள் யாவுமே சமூக நோக்குடனும், சமூகத்தில் உறுதி, அமைதி, ஒற்றுமை, புரிந்துணர்வு பேணும் குறிக்கோளுடனும் ஒழுங்கு செய்யப்படுபவை. பொழுதுபோக்குகள் வெறும் கேளிக்கைகள் ஆகிவிடக்கூடாது. இந்து சமயம் அர்த்தமுள்ள சமயம் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

கடந்த ஆண்டில், துன்பநிகழ்வுகள் இடம்பெற்ற வீடுகளில், புத்தாண்டுக் கொண்டாட்டங்கள் நடைபெறுவதில்லை. அவர்களுக்கு உணவு, தின்பண்டங்கள் வழங்கி மகிழ்விப்பதில் அண்டை அயலவர்கள், சுற்றத்தினர் மிகவும் கண்ணு ம் கருத்துமாக இருப்பர்.

இளவேனில் காலம் தொடங்குவது சித்திரை மாதத்தில். மாமரங்கள் பூத்துக்குலுங்கும். வேப்பமரங்களிலும் பூக்கள் நிறைய இருக்கும். வாழ்க்கை என்பது முற்றிலும் இனிப்பானதோ அல்லது முற்றிலும் கசப்பானதோ அல்ல. இனிப்பும் கசப்பும், இன்பமும் துன்பமும் கலந்ததுதான் வாழ்க்கை என்பதை இயற்கை உணர்த்துவதாக இது அமைகிறது. புத்தாண்டுத் தினத்தில் உணவோடு வேப்பம் பூ சம்பல் அல்லது வடகம் சேர்த்துக்கொள்வதும் வழக்க மாக உள்ளமை நோக்கற்பாலது.

புத்தாண்டுப் பண்டிகை தொடர்பாக நடைபெறும் நிகழ்ச்சிகள் சம்பிரதாயங்களாக எண்ணிவிடுதல் ஆகாது. அவை சமூக நோக்குடை யவை. எமது பாரம்பரியங்கள், கலாசாரங்களை வெளிப்படுத்துபவை. எமது வாழ்க்கை சீரும் சிறப்புமாக அமைவதற்கும், வாழ்க்கையில் ஒரு பிடிப்பை ஏற்படுத்துவதற்கும், மனித உறவுகளைப் பலப்படுத்தி ஒரு பிணைப்பை உருவாக்குவதற்கும் பண்டிகைகள், விழாக்கள் என்பன மனித சமுதாயத் திற்குத் தேவையானவையே. புத்தாண்டு வாழ்த்துக்கள் மனித குலத்திற்கு அமைதியையும் சாந்தியையும் தருகின்றன.

## 35 - வேலும் மயிலும் சேவலும் துணை

"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை"

வேல், முருகப் பெருமானின் திருக்கரத்தில் காணப்படுகின்ற படைக்கலம் ஆகும். இவ்வேல் படையினைக் கொண்டு தம் அடியவர்களின் பகைவர்களை அழிப்பவன் முருகன். யார் யார் அடியவர்களின் பகைவர்கள் என்று பார்த்தால், அறியாமை என்னும் பகைதான் முதலில் நிற்கும். இந்த அறியாமையே எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் ஆகும். அறியாமையை அகற்றுவதற்கு அறிவு ஒளி உதயமாக வேண்டும். முருகன் திருக்கை வேல் உண்மையில் ஞானவேல் ஆகும். அது கொடுமை செய்யும் கொடுவேல் அன்று. முருகனின் ஞானசக்தியாக விளங்குவது அவன்கைவேல். அது ஞான ஒளியைப் பாய்ச்சி மனிதர்களின் அறியாமையை அழிக்கின்றது. இந்த வகையில் அவர்கட்கு முருகன் இன்னருள் செய்கின்றான்.

வேல் என்பது அறிவைக் குறிக்கின்றது; ஞானத்தைக் குறிக்கின்றது. வேலவன் என்பதில் அறிவானவன். ஞான சொரூபன் என்னும் கருத்துத் தொனிக்கின்றது. அறிவினைப் படைக்கலமாகக் கொண்ட முருகன் எஞ்ஞான்றும் வெற்றியைத் தரிசிப்பவனாகவே உள்ளான். வேல் என்பது வெல்லும் சிறப்பினை உடையது. அறிவு வெல்லும் என்பதில் ஐயமும் உண்டோ?

வேலை வணங்குதல் என்றால் அறிவை வணங்குகிறோம். ஞானத்தை ஆராதிக்கிறோம் என்பது தான் பொருள். அறிவை வணங்காமல் இருப்பதால்தான் நாம் பல்வேறு பிரச்சினைகள், துன்பங்களுக்கு முகங்கொடுக்க வேண்டியுள்ளது. வேலை வணங்குதல் நம் வேலையாகும் என்பதை உணர்ந்து கொண்டால் துன்பங்களுக்கு இடமில்லாமல் போய்விடும்.

வேலாயுதத்திற்கு மேலாயுதம் வேறு இல்லை என்பதில் எத்துணை உண்மையுள்ளது என்பதை நாம் உணர்தல் அவசியம். அறிவிற்கு மேல் வேறு என்னதான் இருக்கமுடியும். அறிவினால் ஆகாதது வேறு ஏதேனும் உண்டோ, இவ்வுலகில்? அறிவு ஆற்றலைத் தருகின்றது. ஆற்றல் எடுத்த காரியத்தில் வெற்றியைத் தருகின்றது. வேல் ஆனது மருளைப் போக்கி அருளை நல்குகின்றது என்று கூறலாம்.

நம் நாட்டில் உள்ள நல்லூர், செல்வச் சந்நிதி மற்றும் முருகன்

ஆலயங்களில், மூலஸ்தானத்தில் வேல் வைத்து அடியவர்கள் வணங்குகி றார்கள். திரு உலாவின் போது வேல், வீதிவலமாகவும் கொண்டு செல்லப்படுகின்றது. வேலை வணங்குதல் முருக வழிபாடு ஆகிவிட்டமை யையே இவை குறிக்கின்றன.

வேலின் சிறப்பைக் கண்ட நாம், மயிலின் மாண்பினையும் அறிதல் அவசியம். "வேலும் மயிலும் துணை" என்று மொழியும் வழக்கமும் நம்மிடையே உள்ளது. ஆம். வேலும் மயிலும் எம்மை ஆபத்துக்களில் இருந்து காப்பவை. வேல் முருகனின் ஆயுதம் ஆதல் போல, மயில் முருகனின் வாகனம் ஆகும்.

"கோலமா மஞ்ஞை மீது குலவிய குமரன்" என்கிறார் கச்சியப்பர்.

தோகைமயில் பிரணவ வடிவமாக இருக்கின்றது. அருணகிரியார் திருப்புகழில், "அவளை அணைதர இனிதின் ஓங்கார பரியின் மிசை வருவாயே" என்ற மயிலின் ஓங்கார வடிவத்தை உணர்த்துகிறார். எமக்கு ஆபத்தான வேளையில், முருகப் பெருமானைத் தம்மீது சுமந்த வந்து அருள் செய்ய வல்லது மயில் என்பதை அறிந்து மயிலை வணங்குதல் செய்வோம்.

பகையைத் தடுப்பதற்கு வேலும் மயிலுந் துணையாகின்றன.

"சேவலும் மயிலும் போற்றி திருக்கை வேல்போற்றி போற்றி" என்பதிலிருந்து வேலையும் மயிலையும் போற்றும் நாம் சேவலையும் போற்ற வேண்டும் என்பது பெறப்படுகின்றது. சேவல் முருகனின் வெற்றிக் கொடியில் விளங்குகின்றது. சேவல் ஒரு நாளின் விடிவிற்காக மாத்திரமன்று நம் எல்லோரினதும் வாழ்வின் விடியலுக்காகவும் கூவுகின்றது.

சேவல் நாததத்துவத்தை விளம்பி நிற்கின்றது. சப்தம் என்றால் வேதம். நாதம் என்றால் ஆகமம். சேவல் அதிகாலையில் எழுப்பும் நாதம், ஆகமப் பொருளை உணர்த்துவதாக அமைகின்றது. அதனால் எம்மில் விழிப்பு ஏற்படுத்தப்படுகிறது. தூக்கத்திலிருந்து மக்களை அதிகாலையில் எழச் செய்வதற்காகச் சேவல் கூவுகிறது. இது உலக நிலையில் முருகனின் கொடியில் உயர இருந்து கூவும். சேவல் மக்களை அஞ்ஞான நிலையிலி ருந்து விழித்தெழச் செய்கின்றது. மெய்யறிவை மக்களுக்கு ஊட்டுகின்றது.

வேல் முருகனின் ஞானசக்தி. மயில் பிரணவ வடிவம். சேவல் நாத தத்துவம் என்னும் உண்மைகளை அறிந்து கொள்ளல் அவசியம். முருகனை நினைந்து வழிபடும் இச்சஷ்டி விரத காலத்தில் வேலையும், மயிலையும், சேவலையும் போற்றி வழிபடவேண்டும். அவற்றின் தத்துவங்களையும் அறிந்து கொள்ள வேண்டும்.

# 36 – நன்னடத்தைப் பண்புகள்

சிலர். சமுதாயத்தில் செய்யத் தகாதனவற்றைத் தொடர்ந்து செய்து கொண்டே இருக்கின்றார்கள். தெரிந்து கொண்டே தவறு செய்பவர்களும் உண்டு. தெரியாமல் செய்பவர்களும் உள்ளனர். பொய் பேசுதல், திருடுதல், கோள் சொல்லுதல், இலஞ்சம் பெறல் முதலியன பிழையான காரியங்கள் என்று பொதுவாக எல்லோருக்கும் தெரியும். ஆனால் அவர்கள் தவறு என்று தெரிந்து கொண்டுதான் அவற்றைப் புரிகிறார்கள். தெரிந்து கொண்டு தவறு செய்தல் என்பது பழக்க தோஷமாக மாறிவருகின்றது. அதை விட்டுவிட முடியாமல் பலர் சங்கடப்படுகின்றார்கள். தீய பழக்கங்களுக்கு அடிமையாகக் கூடாது. அடிமைப்பட்டால் அதன் கோரப் பிடியிலிருந்து விடுபடுவது பெருஞ் சிரமம். அவற்றின் தீய விளைவுகளுக்கு அஞ்சியாவது, தீயபழக்கங்களை விட்டுவிட வேண்டும்.

ஒரு செயல் திரும்பத்திரும்ப ஆற்றப்படும் போது, அது பழக்கம் ஆகி விடுகின்றது. அந்தப் பழக்கம் நல்லதாகவும் இருக்கலாம். கெட்டதாகவும் இருக்கலாம். இத்தகைய பழக்கம் நாளடைவில் வழக்கமாகி, நம்மைப் பற்றிக் கொள்கிறது. நல்ல பழக்க வழக்கம் இருக்க வேண்டியது அவசியம். ஆனால் தீயபழக்கம் தொற்றிக் கொண்டால், அதனை விலக்கிக் கொள்வது சிரமம்.

அதிகாலையில் நித்திரை விட்டெழுதல், காலைக் கடன்களை ஒழுங்காக முடித்தல், கடவுளை வணங்குதல், தாய் தந்தையரை மதித்தல், மூத்தோர், ஆசிரியர், பெரியோர் ஆகியோரை கனம் பண்ணுதல், தத்தம் நாளாந்தக் கடமைகளை ஒழுங்காகச் செய்தல், சுத்தம் சுகாதாரம் பேணுதல், நேரந் தவறாமை, பிறர்மனம் புண்படாமல் நடந்து கொள்ளல், சட்டம், ஒழுங்கு பேணு தல், நல்லொழுக்கம் என்பன நல்ல பழக்க வழக்கங்கள். இவற்றை எஞ்ஞான்றும் கைக்கொள்ள வேண்டும். அதனால் நமக்கும் நல்ல பயன் கிடைக்கின்றது. ஏனையோருக்கும் நன்மை ஏற்படுகின்றது.

தீயபழக்க வழக்கங்கள், அவற்றை மேற்கொள்வோரையும் தண்டிக் கின்றன. ஏனையோரையும் பாதிக்கின்றன. மது அருந்துதல், புகை பிடித்தல், பொய் பேசுதல், கோள் மூட்டுதல், வதந்தி பரப்புதல் என்பவற்றால் யாருக்குமே நன்மையில்லை. அப்படியானால் அவற்றை ஏன் பழக்கத்தில் கொண்டிருக்க வேண்டும். மனிதர்கள் வரவர, ஆக்க பூர்வமான பழக்க வழக்கங்களைக் கைவிட்டு வருகிறார்கள். அதேவேளை அழிவு பூர்வமான பழக்கங்களில் தீவிரமாக ஈடுபட்டு வருகிறார்கள்.

நாம் பண்டுதொட்டுப் பின்பற்றி வருகின்ற கலாசாரப் பழக்க

வழக்கங்கள் நம்மை விட்டு விலகிச் செல்கின்றன போலத் தோன்றுகின்றன. நம்முடைய கலாசாரப் பழக்க வழக்கங்கள்தான், சமுதாயத்தில் உயர்ந்தவர் களாக நம்மைப் பிறரின் கணிப்பில் வைத்துப் போற்றப்படுவதற்கு, ஏதுக்களாக அமைந்திருந்தன.

எமது வீட்டையும், சுற்றாடலையும் கூட்டித் துப்பரவு செய்து சுத்தமாக வைத்திருக்கும் பழக்கம் நீண்ட காலமாக நமது மக்களிடையே இருந்து வந்துள்ளது. "சுத்தம் சோறிடும். எச்சில் இரக்க வைக்கும்" என்னும் பழமொழி சுத்தம் பேணலை மக்களிடையே நன்கு உணர்த்தி வந்தது. வீட்டில் உட்கார்ந்தபடி எச்சிலை உமிழ்ந்து முற்றத்தில் துப்புகின்ற பழக்கம் முன்பு இருக்கவில்லை. எழுந்து சென்று, முற்றத்தையும் தாண்டி, வெளியில் ஓர் ஒதுக்குப் புறமாகத் துப்புவார்கள். கஞ்சல், குப்பை, கூளங்களைக் கண்ட கண்ட இடங்களில் எல்லாம் வீசி எறிய மாட்டார்கள். கிடங்கு வெட்டி, அதனுள் போடுவார்கள் அல்லது பசளை ஆக்குவார்கள். ஆனால், தற்பொழுது வீடு என்றும் பார்ப்பதில்லை, வீதியென்றும் பார்ப்பதில்லை. மனிதர்கள் இருந்து எழும்பும் இடம் என்றும் சிந்திப்பதில்லை. மக்கள் உலாவும் பகுதிகள் என்றும் கருத்தில் கொள்வதில்லை. எங்கும் எச்சில் உமிழ்ந்து துப்புகிறார்கள். அசுத்தம் செய்கிறார்கள். அழுக்குகள் அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் காணப்படுகின்றன. இதைப் பற்றியார் கவனிக்கிறார்கள்? இவையாவும் வழக்கமான செயல்களாகி விட்டன. அதனால் அநேகரின் கண்களை உறுத்துவதாக இல்லை.

முன்னர் காலையில் பல்துலக்கி முகங்கழுவி, கைகால் அலம்பிவிட்டுத் தான் கோப்பி, தேநீர் பருகுவார்கள். உணவு உண்பார்கள். காலையில் குளித்துத் தம்மைத் தூய்மையாக்கிக் கொள்வார்கள். தோய்த்து உலர்ந்த ஆடைகளைத் தான் அணிந்து கொள்வார்கள். பிறர் முன்னிலையில் வாயைத் திறந்து கொட்டாவி விடமாட்டார்கள். இருமல், தும்மல் செய்ய மட்டார்கள். அபான வாயுவை வெளியேற்றார்கள். கைகால்களை நீட்டி நிமித்திப் பக்கத்தில் இருப்பவர்களுக்கு இடைஞ்சல் செய்யமாட்டார்கள். உணவை உட்கொண்டு கொண்டோ, நீர் அருந்திக் கொண்டோ பேச்சில் ஈடுபடமாட்டார்கள். உரத்துப் பேசுதல், பலத்துச் சிரித்தல், வெட்டிப் பேசுதல், சத்தமிடுதல், வம்பு பேசுதல் என்பனவற்றில் ஈடுபட்டால் தம்மை உலகம் பழித்துரைக்கும் என்று அஞ்சினர். அதனால் கீழ்த்தரமான பழக்கங்களைப் பழகாமல் இருந்தனர்.

ஆண்களினதும் பெண்களினதும் மதிப்பு, மரியாதை, கௌரவம், பெருமை யாவும் அவரவர் ஒழுக்கத்தைப் பொறுத்தே தீர்மானிக்கப்பட்டன. ஆண் பெண் சமத்துவம் என்பது அவரவர் ஒழுக்கத்தினாலேயே பேணப்பட்டு

வந்தது. ஆண் என்றாலும் சரி, பெண் என்றாலும் சரி, ஒழுக்கம் குன்றினால், கீழ்நிலைக்கு இறக்கப்பட்டு விடுவார்கள். ஒருவரின் உயர்வு-தாழ்வினை நிர்ணயிக்கும் உரைகல்லாக அவரவர் ஒழுக்கமே விளங்கிற்று. பிறப்போ. பால் வேறுபாடோ உயர்வு-தாழ்வினைத் தீர்மானிக்க முடியாது. இது எமது கலாசாரத்தின் சிறப்பு.

நல்லொழுக்கம், நல்ல பழக்க வழக்கங்களால் ஏற்படுகின்றது. நல்ல பழக்க வழக்கமுள்ளோரை எல்லோரும் நேசிக்கின்றனர். அவர்மீது அன்பு செலுத்துகின்றனர். அவர்கள் எல்லோருக்கும் ஏற்றவர்களாக விளங்குகின்றனர். எதனையும் இலகுவாகச் சாதித்தும் விடுகின்றனர். ஆகவே, வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்களாகின்றனர்.

முதன்முதலில் ஒருவரைச் சந்திக்கிறோம். முகம் மலர்ந்து, வணக்கம் கூறி இனிமையாக அளவளாவுகின்றோம். இன்முகமும், பணிவும், இனிய பேச்சும் ஒருவரிடம் இருப்பது நல்ல பழக்கமாகும். வந்த விடயத்தை முடித்துக் கொண்டு விடைபெறும் முன்னர் நன்றி கூறவேண்டும். சிறிய விஷயம்போல் தோன்றினாலும், முதலில் வணக்கம் கூறுவதும் முடிவில் நன்றி சொல்வதும் ஆன பழக்கம் பெரும்பாலும் நம்மிடையே அருகி வருகின்றது. இவையெல்லாம் வெறும் சம்பிரதாயங்கள்தானே என்கின்றனர் சிலர். சம்பிரதாயங்களாக இருப்பினும் வணக்கம் கூறுதலும் நன்றி சொல்வதும் நல்ல மனிதப் பண்புகள், அவற்றால் மனிதர்களிடையே நல்லுறவு, நல்லிணக்கம் என்பன உண்டாகின்றன என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். நல்ல பழக்க வழக்கங்களை வெறுமனே சம்பிரதாயங்கள், மூடநம்பிக்கைகள் என்று கூறிக் கைவிட்டு வருவதனால், மனிதரிடையே உள்ள நல்லுறவு, நல்லிணக்கம், புரிந்துணர்வு என்பன நலிந்தும், மனிதர்களை விட்டு நீங்கியும் வருவதை இன்னமும் நாம் உணராமல் இருக்கிறோம் என்பதுதான் விந்தையாக உள்ளது. காலாகாலமாக மனித குலத்தை வாழ்வித்து வந்தவை மனிதரில் காணப்பெற்ற நல்லபழக்க வழக்கங்கள் என்பதை மறுத்துவிட முடியாது. கெட்ட பழக்கங்கள் எவரையும் வாழ்விக்காது. அதேவேளை வாழ்க்கையில் சீர்கேடுகளையும், சீரழிவுகளையும் உண்டுபண்ணு ம் என்பதையும், மறந்துவிட முடியாது. நல்லவர்கள் கெட்டதில்லை, கெட்டவர்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்ததில்லை. இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாச நூல்கள் இந்த உண்மைகளை எடுத்துரைக்கின்றன. அன்றைய புராண, இதிகாசங்கள் தொடக்கம், தற்காலச் சிறுகதைகள், நாவல்கள் வரை இத்தகைய நீதியையும், உண்மைகளையும், வாழ்க்கைத் தத்துவங்களையும் எடுத்துக் காட்டுகின்றன. மக்களிடையே இவற்றைப் பரப்ப முயல்கின்றன. இந்நூல்களை இன்று எத்தனைபேர் படிக்கின்றார்கள்? அப்படிப் படித்தாலும், அவை பற்றிய

ஆய்வுகளிலும், அவை தமது பண்பாட்டுப் பொக்கிஷங்கள் என்று பெருமை கொள்வதிலும், தம்பட்டம் அடிப்பதிலும், அவற்றைப் பிரசங்கம் செய்வதிலும் ஈடுபாடு கொள்கின்றார்களே தவிர, படித்தவற்றை வாழ்க்கையில் எத்தனை பேர் கடைப்பிடிக்கின்றார்கள். போதனைகளை எந்த அளவிற்குச் சாதனை யில் காட்டுகின்றார்கள்? என்பவை கேள்விகளாகவே உள்ளன. எல்லாமே ஏட்டளவில்தான் என்றநிலை நம்மிடம் புகுந்து விட்டது.

மனிதனுக்கு ஆறறிவு உண்டு. ஆறாவது அறிவு, மனிதனுக்கு மட்டுமே உரித்தான சிறப்பறிவு. அதுவே பகுத்தறிவு என்றும், பிரித்துணரும் அறிவு என்றும் சொல்லப்படுகிறது. நல்லது, கெட்டது; சரி பிழையென்று தீர்ப்பு வழங்கும் பொறுப்பு இந்த ஆறாவது அறிவுக்கு உரியது.

இந்த ஆறாவது அறிவு, தம்மைப் பற்றி உயர்வு பேசுவதற்கும், விலங்குகள் மற்றும் தாழ்ந்த உயிரினங்களிலிருந்து தம்மை வேறுபடுத்திக் காட்டுவதற்கும், மனிதகுல மாண்பினைப் பறைசாற்றுவதற்கும் ஒரு காரணியாகவும், உதாரணமாகவும் எடுத்துக்காட்டி பிரசாரம் மேற்கொள்ள, நிரூபணம் செய்ய, மனிதர்கள் பயன்படுத்திக் கொள்கிறார்கள். ஆனால், இந்த ஆறாவது அறிவின் துணையோடு, மனிதத்தையும் மானுடத்தையும் மனித சமுதாயத்தில் நிலைபெறச் செய்ய எத்தனிப்பவர்கள், முயற்சி மேற்கொள்பவர்கள் மிகமிகக் குறைவாகவே உள்ளனர். நீண்ட மனித நாகரிக வரலாற்றில், என்றுமே இடம் பெற்றிருக்காத அநாகரிகச் செயல்கள், அனர்த்தங்கள், மனித அழிவுகள், கொடுமைகள், கொடூரங்கள் என்பன இன்றைய மனித வரலாற்றில் இடம் பெற்று வருகின்றன. இன்று மனித அநாகரிகத்தையே, நாகரிகம் என்று வர்ணிக்கப்படுகிறது. பொய்யான இந்த உடலுக்கு மெய்யென்று பெயர் சூட்டி, அவ்வாறு அழைக்கும் பழக்கத்தைக் கொண்டவர்கள் மனிதர்கள். அந்தப் பழக்க தோஷத்தின் அடிச்சுவட்டில், இன்று மனிதர்கள், தமக்கு எதிர்மறை யானவற்றை உடன்பாடாகவும், அந்நியமானவற்றை தமக்கே உரித்தான வையாகவும் கொள்ளும் பழக்கத்தை வழக்கமாக்கி வருகின்றனர். மனித நாகரிகம், பண்பாடு என்பன சீரழிந்தபின் மனிதகுலத்தின் பெருமை, சிறப்பு, உயர்வு என்பன எவ்வாறு நிலைக்கமுடியும்?

"சித்திரமும் கைப் பழக்கம்
செந்தமிழும் நாப்பழக்கம்
கல்வி மனப்பழக்கம்
நல்ல நடத்தையும் நடைப்பழக்கம்"

என்று கொண்டு நல்ல பழக்கங்களையே பழகி, நமது பண்பாட்டைப் பேணி, மனிதகுல உயர்வினைப் பாதுகாப்போமாக.

# 37 - விஜய தசமி

நவராத்திரி ஒன்பது நாட்களிலும் மகாசக்தியை அதிட்டித்து நிற்கும் துர்க்கை, இலக்குமி, சரஸ்வதி ஆகிய முத்தேவியர்களையும் மனம், மொழி, மெய்த் தூய்மையுடன் வழிபாடு செய்தோம். உடல், உளப்பலம், செல்வபலம், கல்விப்பலம் ஆகியவற்றைத் தந்து அருளுமாறு வேண்டி பணிந்து நின்றோம். விரதம் அனுட்டித்தோம். விழா எடுத்து மகிழ்ந்தோம். பாடியும் ஆடியும் பரவினோம். இன்று விஜய தசமி. வெற்றித் திருநாள். வரங்கள் பலவற்றை அன்னை அருளி, எம்மையெல்லாம் வாழ்விக்கும் பெருநாள். இருள் அகன்ற நாள். ஒளி பிறந்த நாள். அறியாமை நீங்கி அறிவு தோன்றிய நாள். மடமை தொலைந்த நாள். மலர்ச்சியும் விழிப்பும் மக்களுக்கு ஏற்பட்ட நன்னாள். ஆகவே, இன்றைய விஜய தசமியில் புதிய சிந்தனை, புதிய கருமங்கள், புதிய வாழ்வு என்பனவற்றை ஆரம்பிப்பதால், யாவும் சித்தியாகும், கைகூடும் என்பது உறுதி.

விஜய தசமியில், வித்தியாரம்பம் செய்து வைப்பது நமது சைவ கலாசார மரபாக உள்ளது. கல்வி கற்கும் பராயத்தை அடைந்த பிள்ளைகளுக்கு இத்தினத்தில் ஆசிரியரைக் கொண்டு ஏடு தொடக்குதல், வித்தியாரம்பம் எனப்படும். அதனை ஒரு சமயச் சடங்காகவே மேற்கொள்ளல் நமது பாரம்பரியம். மாதா, பிதா, குரு, தெய்வம் என்போர் நமது வணக்கத்திற்கும், வழிபாட்டிற்கும் உரியவர்கள். ஈன்று புறந்தருதல் அன்னையின் கடமை. கல்வியைப் பெற்றுக் கொடுத்து மக்களைச் சான்றோர் ஆக்கும் பொறுப்பு தந்தை உடையது. நன்கு கல்வி கற்றுத் தேர்ந்த, நல்லொழுக்கமும் நற்பண்புகளும் நிறைந்த, சிறந்த ஆசிரியரைத் தேடி, அந்த ஆசிரியரைக் கொண்டு தம் மகவுக்கு விஜயதசமியில் ஏடு தொடக்கி வைப்பிக்க வேண்டும். குரு என்பவர் ஆசிரியரே என்பதை மறந்து விடல் ஆகாது.

விஜயதசமியன்று மகிடாசுர சங்காரம், அம்பாளினால் நிகழ்த்தப்பட்டது. மகிடாசுரன் எருமைத் தலையையுடையவன். மந்த புத்திக்கும், மடமைக்கும், அறியாமைக்கும் இருப்பிடமான அந்த அசுரன், அநியாயங்கள், அட்ட காசங்கள் புரிந்து தேவர்கள், மனிதர்கள் யாவரையும் துன்புறுத்தி வந்தான். தேவர்கள் சிவமூர்த்தியிடம் முறையிட அதைக் கேட்டு கோபம் கொள்ள, அந்தக் கோபாக்கினி பெண்ணுருவாகத் திரண்டது. அதுவே வீரமாகாளி யுரு என்பர். மகிடாசுரன் பல மாயவடிவங்களைக் கொண்டு தேவியுடன் போரிட்டான். இறுதியில் தேவி, சண்டிகையுருக் கொண்டு, சக்கரத்தை ஏவிவிட்டு, மகிடாசுரசங்காரத்தை நிகழ்த்தினார். தத்துவரீதியாக இச்சம்பவத்தை நோக்கும்போது, அறியாமை இருள் அகற்றப்பெற்று அறிவுச்

சுடர் ஏற்றப்படுவதை இது குறிப்பதாக அமைகிறது. தேவி தோன்றி அறியாமையை நீக்கியருளினார். அறியாமை அகன்று அறிவு வெளிப்பட்ட விஜயதசமியில் சிறார்களுக்கு வித்தியாரம்பம் செய்தல் எத்துணை பொருத்தம் என்பது நோக்கற்பாலது. எமது கலாசாரம் எவ்வளவு அர்த்தமுள்ளது என்பதை அறிந்து கொள்ளும்போது பூரிப்பு ஏற்படுகிறது.

விஜயதசமியன்று மகாநோன்பு முடிவடைகிறது. இதனையே மானம்பூ என்று இக்காலத்தில் திரித்துக் கூறுகின்றனர். வன்னி, வாழை வெட்டும் நிகழ்ச்சி கோயில்களில் இன்று நடைபெறுகின்றது. அம்பாள் எழுந்தருளி வீதிவலம் வந்து, வாழைமரத்தை அசுரனாகப் பாவித்து வெட்டி வீழ்த்தும் வழக்கம் இன்றும் நடைமுறையில் இருந்துவருகிறது.

இத்தகைய வெற்றித் திருநாளில், அம்பாளைப் பணிந்து நாம் கேட்கும் வரங்களை அம்பாள் அருளுகின்றாள். மகாகவி பாரதியார், சிவசக்தியை என்ன வரம் கேட்கின்றார் என்று பாருங்கள்.

"வல்லமை தாராயோ – இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே
சொல்லடி சிவசக்தி ......... இதை
அருள்வதில் உனக்கு ஏதுந் தடையுளதோ"

என இடித்துக் கேட்கிறார். பாரதியார் வேண்டி நிற்பது வல்லமை. ஏன் அவருக்கு வல்லமை என்றால், இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே, தமக்கு வல்லமை வழங்குமாறு சிவசக்தியைக் கேட்கிறார். தான் வாழ்வதற்கு அவர் வரம் கேட்கவில்லை. இதுவே பாரதியாரின் பெருந்தன்மை.

நாமும் நாட்டிலும், உலகிலும் நீதி, நேர்மை, அமைதி, சமாதானம் ஓங்க அன்னையிடம் வரம் கேட்போம். சுயநலங்களைத் துறப்போம். உலகம் வாழும் போது தான் நாமும் வாழ முடியும். தெய்வசந்நிதியில் எங்கள் நன்மைக்காக மாத்திரம் வரம் கேட்கும் நிலையினை நீக்கி, விஜயதசமியில் எல்லோரும் சுகமாக வாழ அருள்புரியும்படி அன்னையை மன்றாடுவோம்.

"நம்பினார் கெடுவதில்லை, நான்கு மறைத்தீர்ப்பு
அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிகவரம் பெறலாம்."

என்னும் மகாகவி பாரதியாரின் அனுபவத்தை நினைந்து, அம்பிகையைத் துதித்து அவள் அருள் பெற்று எல்லோரும் இன்புற்று வாழ்வோமாக.

# 38 - நன்மக்கட் பேறு

"சான்றோன் ஆக்குதல் தந்தைக்கு கடனே"

என்பது பண்டைத் தமிழ் மக்கள் வகுத்த நெறி. பிள்ளைகளைப் பெற்று விட்டால் மாத்திரம் போதாது. அவர்களைப் பேணி வளர்க்க வேண்டிய பொறுப்பும் பெற்றோருடையதே. உடல்நலம், மனநலம்மிக்கவர்களாகப் பிள்ளைகள் வளர்க்கப்பட வேண்டும். இவற்றுடன் குணநலன், பண்பு நலன், அறிவு நலன் என்பவற்றையும் பிள்ளைகள், வளர்ந்து வருகின்ற இளமைப் பருவத்தில் பெற்றுக் கொள்வதற்கேற்ற கல்விச் சூழலையும், சமூகச் சூழலையும் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். தெய்வ நம்பிக்கை, தெய்வ பக்தி உடையவர்களாகப் பிள்ளைகள் வளர்க்கப்படும் போது தான் அவர்கள் சீலர்களாக ஆக முடியும். நன்மக்களைப் பெற்று வளர்த்தல் என்பது அறச் செயலாகும்.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்று அதன்

நன்கலம் நன்மக்கட் பேறு" என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. ஒரு குடும்பத்தில் நல்ல கணவன், நல்ல மனைவி இருத்தல் அக்குடும்பத்திற்கு மங்கலத்தைத் தரும். ஆங்கு நல்ல அறிவும், நற்பண்பும், நல்லொழுக்கமும் வாய்ந்த பிள்ளைகளும் இருந்துவிட்டால், அக்குடும்பத்தை அழகு செய்கின்ற நல்ல அணிகலன்கள் ஆக அவை விளங்கும் எனப்தில் ஐயமில்லை. மகிழ்ச்சியும், நிறைவும் இனிமையும் துள்ளி விளையாடும். நன்மக்களைப் பெற்ற, தாய் தந்தையர்களைப் பார்த்து, இத்தகைய அறிவும், குணமும், ஒழுக்கமும் நிறைந்த பிள்ளைகளுக்குப் பெற்றோர்களாக அமைய இவர்கள் எத்துணை தவமும், நோன்பும் மேற்கொண்டார்களோ என்று உலகத்தவர் வியந்து புகழ் பேசுவர். இத்தகைய நல்ல புகழ்ச்சியைப் பெற்றோர்களுக்குப் பிள்ளைகள் பெற்றுக் கொடுப்பது பிள்ளைகளின் கடமையாகும். இதனையே வள்ளுவர் பெருமானும்.

"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை
என் நோற்றான் கொல் எனுஞ் சொல்"

என்று கூறுகிறார். ஒவ்வொரு பெற்றோரும் தம் பிள்ளைகளிடம் கேட்பது பணம் காசையோ, பொருள் பண்டத்தையோ அல்ல. தம் பிள்ளைகள் நல்லொழுக்க முள்ளவர்கள், பண்பிற் சிறந்தவர்கள் என்று பிறர் சொல்லக் கேட்டு, அதனால் மட்டற்ற மகிழ்ச்சியையும் இன்பத்தையும் அடைதலையே பெற்றோர்கள் பெரிதும் விரும்புகிறார்கள். இந்த இன்பத்தை, தம்மைப் பெற்றுப் பேணி வளர்த்த தாய், தந்தையர்களுக்குக் கொடுக்க முடியாதா?

என்ன? நிச்சயமாகக் கொடுக்க முடியும். இதற்குப் பெருஞ் செலவு ஏற்படாது. நல்ல மனம் தான் தேவை. மனம் மட்டும் ஒழுங்காகி விடின், மற்றவையாவுமே ஒழுங்காகிவிடும். மனமது செவ்வையானால் மந்திரம் தேவையில்லை என்பர்.

"எந்தக் குழந்தையும் நல்ல குழந்தை தான்
மண்ணிற் பிறக்கையிலே" என்கிறார் ஒரு கவிஞர். "மனிதன் இயற்கையில் கெட்டவனாகப் பிறப்பதில்லை. சமூகத்தின் குறைபாடுகளே அவனைக் கெட்டவனாக்குகின்றன" என்கிறார் ஒரு கல்வி உளவியலாளர். குழந்தை சந்திக்கும் முதல் சமூகம் அந்தக் குடும்பம். அப்பா, அம்மா, பாட்டன், பாட்டி, சகோதரர்கள் என்போர்களே குடும்ப உறுப்பினர்கள். இவர்கள் ஒருவரோடு ஒருவர் நடந்து கொள்கின்ற விதம், பழகுகின்ற முறை, பேசுகின்ற பேச்சு மற்றும் இவர்களின் பழக்கவழக்கங்கள், செயல்கள் ஆகியவற்றை அவதானித்துப் பார்த்து, அவர்களின் நடத்தைகளைப் பின் பற்றித் தாமும் அவ்வாறு நடந்து கொள்ள அக்குழந்தை முயல்கிறது. போலச் செய்தல், பின்பற்றுதல், பார்த்துப் பழகல் என்பன குழந்தைகளின் இயல்புகள். "இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்பர். எனவே குழந்தையாக இருக்கும் போது வீட்டிலுள்ள தாய், தந்தையர்கள் மற்றும் சகோதரர்கள் பெரியவர்களிடமிருந்து கற்றுக்கொள்ளும் பழக்க வழக்கங்கள் குழந்தை யின் உள்ளத்தில் நன்கு பதிந்து விடுகின்றன. இவை நல்லவையாயின் நன்மை பயக்கும், தீயவையாயின் தீமை பயக்கும். எனவே, குடும்பத்திலுள்ள வளர்ந்தவர்கள் நல்ல உறவுகளைப் பேணி, பண்பான முறையில் ஒழுகி வந்தால், வளர்ந்து வருகின்ற பிள்ளைகளும் நல்லொழுக்க முள்ளவர்களாக வளர்வர். அப்பொழுதுதான் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்", "தந்தை சொல் மிக்கதோர் மந்திரம் இல்லை", "தாய் சொல்லைத் தட்டாதே" எனும் ஔவையின் மகுட வாசகங்கள் புத்துயிர்ப்புப் பெறுவனவாக அமையும்.

# 39 - நல்லொழுக்கம்

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் நல்லொழுக்கம் பற்றி வழங்கிய கருத்துக்களை ஈண்டு நோக்குவோம்.

சைவர்கள் ஆகிய நாம் கடவுளும் புண்ணிய பாவமும், சுவர்க்க நரகமும், மறுபிறப்பும், முத்தியும் உண்டு என்னும் உண்மையை ஒரு போதும் மறத்தலாகாது.

ஓருயிருக்கும் சிறிதேனும் தீங்கு நினைக்கலாகாது. தனக்குத் துரோகஞ் செய்தவரிடத்தும், தான் துரோக சிந்தை இல்லாதவனாய் இருத்தல் வேண்டும். பிற உயிர்களுக்குத் துன்பம் வந்த பொழுது, இரக்கங் கொண்டு, அதை நீக்க முயல வேண்டும். கோபங் கொள்ளலைத் தவிர்க்க வேண்டும்.

பிறருடைய பொருளை நச்சுக்காய் போல் நினைத்தல் வேண்டும். பிறர் தமக்குச் செய்த நன்றியை ஒரு போதும் மறத்தல் ஆகாது. சிநேகிதர், பகைவர், அயலார் ஆகிய மூன்று திறத்தாரிடத்தும் பட்சபாதமின்றிச் சமமாயிருத்தல் வேண்டும். பிறருடைய கல்வி, செல்வம் என்பவற்றைக் கண்டு பொறாமைப் படலாகாது.

கல்வியும் அறிவும், நல்லொழுக்கமும், செல்வமும், அழகும் தமக்கு இருப்பதைக் காட்டிலும் பிறருக்கு மிகப் பெருகல் வேண்டுமென்று எண்ணு தல் சாலச் சிறந்ததாகும்.

காணாதவிடத்துப் பிறரை இகழ்ந்து பேசலாகாது. விளையாட்டுக் காயினும் பொய் பேசக்கூடாது. சிலர் தப்பித்துக் கொள்வதற்காகப் பொய் பேசுகின்றனர். அதுவும் ஆகாது. எப்பொழுதும் உண்மை பேசவேண்டும். உண்மையே உயர்வு தரம் தன்னை வைதவனிடத்தும் கடுஞ்சொற்களைப் பேசாது விடுதல் நன்மைபயக்கும். எவர்க்கும் பயன்படாத வீண்வார்த்தை களைப் பேசாது விடுதல் வேண்டும்.

தமையன் மனைவியைக் குருபத்தினியாகவும், தம்பி மனைவியை மருமகளாகவும், பிறர் மனைவியரைத் தாயும், தமக்கையும், தங்கையுமாகவும் பாவித்தல் வேண்டும்.

கடவுளை நிந்திப்பவர், பஞ்சமா பாதகங்களைப் புரிவோர், பொறாமையு

டையவர்கள், வஞ்சகர், மிகச் செலவு செய்வோர், பலரோடு பகை கொண்டவர்கள் ஆகியோருடன் நட்புக் கொள்ளவோ, சேர்ந்து கொள்ளவோ கூடாது.

தனக்கு மந்திரங்களையேனும் சாத்திரங்களையேனும் உபதேசிக்கும் குருவை அன்போடு வழிபடல் வேண்டும். கல்வியைக் கற்பிக்கும் ஆசிரியனும் குருவே. சமயச் சடங்குகளை நடத்தி வைப்பவரும் குருவுக்குச் சமானமானவர் ஆவர். அவர்கள் யாவரும் வணக்கத்திற்குரியவர்கள்.

தகப்பன், தாய், பெரிய தகப்பன், சிறிய தகப்பன், பெரிய தாய், சிறிய தாய், பாட்டன், பாட்டி, மாமன், மாமி, தமையன், தமையன் மனைவி, குரு குருபத்தினி, உபாத்தியாயர் மற்றும் மூத்தோர் முதலிய பெரியோர்கள் வந்தால், அவர்களைக் கண்டவுடன் இருக்கையை விட்டெழுந்து வணக்கம் செய்தல் வேண்டும். அப்பொழுது அவர்கள் மனம் குளிர்ந்து வாழ்த்துவர். பெரியோர்களின் வாழ்த்துக்கள் எம்மை வாழ்விக்கும் சஞ்சீவிகள் என்பதை நாம் மனதில் கொள்ளுதல் அவசியம். பெரியோர்களை நாள்தோறும் வணங்கி, அவர்களின் ஆசிகளைப் பெற்று வருபவர்களுக்கு ஆயுள், கல்வி, கீர்த்தி, பலம் என்னும் நான்கும் அபிவிருத்தியாகும்.

பெரியோர்களையும் ஏனையோரையும் வணங்கும்போது, அவ்வணக்கம் அவர்களுக்கென்று கருத்தில் கொள்ளாமல், அவர்களிடத்தில் உறையும் கடவுளுக்கென்று புத்திபண்ணி வணங்குதல் வேண்டும். நாம் எவரை வணங்கினாலும் வணங்குவது இறைவனையே என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

தான் ஒருவருக்குச் செய்த நன்றியை, அது பெரிதாயினும் சரி, சிறிதாயினுஞ் சரி சொல்லித் திரித்ல் ஆகாது. தனக்கு ஒருவர் இட்ட போசனத்தை, அது சுவையற்றதாக இருப்பினும், அது பற்றி இகழ்ந்து பேசுதல் கூடாது. தான் செய்த கருமத்தையும், தானத்தையும், உதவியையும் புகழ்ந்து பிறருடன் பேசுதல் நல்லதல்ல.

நலிந்தோர், ஊனமுற்றோர், வயோதிபர், ஏழைகள், நோயாளர், படியாதவர்கள் ஆகியோரை அவர்களின் குறைகளைச் சொல்லி நையாண்டி செய்தலோ, பரிகசித்தலோ மனிதாபிமானமற்ற செயல்களாகும்.

அயனம், வருடப்பிறப்பு, பெருநாட்கள், அமாவாசை, பௌர்ணிமை முதலிய விசேட தினங்களிலே ஆலயங்களையும் பிதா, மாதா, குரு, உபாத்தியாயர்,பெபரியோர்கள் ஆகியோர்களையும் தரிசித்தல், வணங்குதல் வேண்டும்.

# 40 - நேர முகாமைத்துவம்

"நீ உனது நேரத்தை எவ்வாறு செலவிடுகிறாய் என்று கூறு. நீ எப்படிப்பட்ட மனிதன் என்பதைக் கூறிவிடுகிறேன்" என்கிறார் ஓர் அறிஞர். இக்கருத்து சிந்திக்கற்பாலது. சூரிய வெளிச்சம், காற்று, நீர் என்பன எமக்கு இலவசமாகக் கிடைப்பதனால் அவற்றை எப்படி வேண்டுமானாலும் செலவு செய்யலாம், ஊதாரித்தனம் செய்யலாம் அல்லது விரயம் செய்யலாம் என எண்ணி விடலாகாது. நேரமும் அப்படித்தான். நேரம் பொன்னானது. அருமையானது, மிகுந்த பெறுமதி வாய்ந்தது. எனவே வகையறிந்து, வரிசையறிந்து, நேரத்தைப் பயன்படுத்த வேண்டும். நேரத்தை வீண் விரயம் செய்தலோ அதற்கு மதிப்புக் கொடுக்காது விடுதலோ, உதாசீனஞ் செய்தலோ தவறான செயல்கள் ஆகும். எனவே வாழ்க்கையில் முன்னேறுவதற்கு நேர உணர்வு, நேரத்தை முகாமை செய்யும் திறன், நேரத்தை மதிக்கும் பண்பு இருக்க வேண்டியது மிக அவசியம். நேரத்தைத் திட்டமிட்டுக் கையாளுதல் என்பதே நேரத்தை முகாமை செய்வதாகும்.

ஒரு நாள், இருபத்து நான்கு மணித்தியாலங்கள் தான் என்றில்லாமல், நாற்பத்தெட்டு மணித்தியாலங்களாக இருக்கக் கூடாதா எனப் பலர் ஏங்குகின்றனர். அவர்களே "நேரம் போதாது, நேரம் பறக்கின்றது. நேற்றுத் தான் இந்த வருடம் பிறந்தது போல இருக்கின்றது. அதற்குள் ஒரு வருடம் போய்விட்டதே" என்றெல்லாம் கவலைப்படுகின்றனர். இன்னொரு சாரார் "இந்த நேரம் போகுதில்லையே, எப்படி நேரத்தைக் கழிப்பது என்று தெரியாமல் இருக்கிறதே" என்று விசனப்படுகிறார்கள். இவ்விரு சாராரும் நேரத்தைச் செவ்வையாகத் திட்டமிட்டு முகாமை செய்யாதவர்களே ஆவர்.

குறித்த நேரத்தில், குறித்த வேலையைச் செய்தல். ஒரு நேரத்தைக் குறிப்பிட்டு, அந்த நேரத்தில் ஒருவரைச் சந்திப்பதாகக் கூறின் அக்குறித்த நேரத்திலேயே தவறாது அவரைச் சென்று சந்தித்தல், ஒரு கருமத்தைக் குறித்த நேரத்திற்கு ஆரம்பித்தல், நிறைவு செய்தல், பாடசாலை, அலுவலகம், வேலைத்தலம் ஆகியவற்றிற்கு உரிய நேரத்திற்குச் சமுகமளித்தல் என்பனவற்றை வாழ்க்கைப் பழக்கமாக நாம் கொள்ளுதல் அவசியம்.

ஒரு வைபவம் அல்லது கூட்டம் எட்டு மணிக்கு ஆரம்பமாகும் என அறிவித்தலில் குறிப்பிட்டு விட்டு, அரை மணி நேரமோ, ஒரு மணி நேரமோ பிந்தித் தொடங்குகின்ற வழக்கத்தை நாம் காண்கின்றோம். பிந்தியமைக்காகச் சபையோரிடம் பலரும் பல தடவைகள் மன்னிப்புக் கேட்கும் தோரணையையும் பார்க்கின்றோம். அதனால், மேலும் பல நிமிடங்கள்

செலவு செய்யப்படுகின்றன. மன்னிப்புக் கோருபவர்கள், அடுத்த தடவைகளிலாவது திருந்தி உரிய நேரத்துக்குச் சமுகமளிக்கின்றார்களோ என்றால், அதுவுமில்லை. இவ்வாறு நேரத்தை உதாசீனஞ் செய்கின்றோமென்று தெரிந்து கொண்டே மேலும் மேலும் தவறு செய்பவர்கள் அதிகமாக உள்ளனர். கூட்டம் எட்டு மணிக்கு ஆரம்பமாகும் என்றும், எட்டு மணியளவில் ஆரம்பமாகும் என்றும் இரண்டு விதமாக அறிவித்தலில் நேரத்தைக் குறிப்பிடும் முறையினையும் காணமுடிகின்றது. எட்டு மணியளவில் என்றால், சுட்டிப்பாக நேரம் குறிப்பிடப்படவில்லை என்பதுதான் பொருள். நேர உணர்வு உள்ளவர்களாக நாம் மாற வேண்டும். அதற்கு இத்தனை மணிக்கு என்று குறிப்பிட்டு, குறித்த நேரத்தில் தொடங்க வேண்டும். இதனால் எல்லோருக்கும் நன்மையே கிட்டுகின்றது.

"உலகத்திலேயே, சிறப்பாக வாழ்வதற்கு மிகவும் உவப்பான இடம் எது", என வினா எழுப்புபவர்களுக்கு கூறக்கூடிய விடை, எங்கே நேரத்திற்கு மதிப்புக் கொடுக்கப்படுகின்றதோ, எங்கே நேரம் உரிய முறையில் முகாமை செய்யப்படுகின்றதோ, அந்த இடம்தான் வசிப்பதற்கு நேர்த்தியான இடம் என்று துணிந்து விடை கூறலாம். நேரத்துக்கு விழித்தெழுதல், நேரத்துக்குக் காலைக்கடன்களை முடித்தல், நேரத்துக்கு உடற்பயிற்சி செய்தல், நேரத்திற்கு உணவு உண்ணு தல், நேரத்துக்குத் தொழிலுக்கோ வேறு கருமங்களுக்கோ செல்லுதல், நேரத்துக்கு வீடு திரும்புதல், நேரத்துக்கு மாலைக்கடன்களைச் செய்தல், நேரத்துக்கு நித்திரைக்குச் சென்று உறங்குதல் என்று ஓர் ஒழுங்கினை வாழ்க்கையில் மேற்கொண்டுவரின் ஒருவரின் சுபீட்ச வாழ்வு நிச்சயமாகி விடுகின்றது. நோய்கள், பிணிகள், துன்பங்கள், நெருங்க மாட்டா. மகிழ்ச்சியும், இன்பமும், நிம்மதியும் எஞ்ஞான்றும் அத்தகையோரின் வாழ்வில் நிறைந்திருக்கும். நேரத்தை மதிப்பவர்கள் நேர்த்தியாக வாழ்வர். நாமும் நேரத்தை அனுசரித்து செவ்வையாக நேரத்தை முகாமை செய்து நல்வாழ்வு பெறுவோமாக.

075-511245

